“


# பேகிங் பவுடர்

# உபயோகித்து, மென்மையாக சுவைபடத் தயாரிக்கப்பட்ட கேக்குகளை என் தேநீர் விருந்துகளில் அனைவருமே விரும்புகின்றனர்”



என்கிறார் திருமதி சுலோசனா ராவ்.
‘ஶ்ரீ நிவாஸ்’, 95, மர்ரேட்பள்ளி, சிகந்தராபாத், ஆந்திர பிரதேஷ்.

கார்ன் ப்ராடக்ட்ஸ்
தேர்ந்தெடுத்த
பரிசு – பெற்ற
பக்குவ முறை

## முட்டை கலவாத சாக்கலேட் கேக்

தயாரிக்க உதவுவது
ரெக்ஸ்
பேகிங் பவுடர்






கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமுன் ஆகியவற்றை சுவைபட அதி மென்மையாகத் தயாரிக்க மிகவும் உதவுகிறது, ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப்பட்டிருப்பதால், பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ் பேகிங் பவுடர்.

**பக்குவ முறை:**

2 கோப்பை மைதா
3 தேக்கரண்டி (தலைதட்டிய அளவு) ரெக்ஸ் பேகிங் பவுடர்.
1 கோப்பை சர்க்கரை
½ கோப்பை வெண்ணெ
1 கோப்பை பால்
4 மேசைக்கரண்டி (தலைதட்டிய அளவு) கோக்கோ.
½ தேக்கரண்டி உப்பு.
1 தேக்கரண்டி வனில்லா எஸ்ஸென்ஸ்.
½ கோப்பை துருவிய தேங்காய்.
½ கோப்பை பொடியாக நறுக்கிய அக்ரோட்டு.

1. மைதா, உப்பு மற்றும் ரெக்ஸ் பேகிங் பவுடரை ஒன்றாகச் சேர்த்து சலித்து எடுக்கவும். வெண்ணெயையும் சர்க்கரையையும் விழுதுபோல் ஆக்கவும். கோக்கோவை சூடான சிறிது பாலுடன் கலந்து, விழுதாக்கிய வெண்ணெ-சர்க்கரையுடன் சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
2. துருவிய தேங்காயை ஒரு தேக்கரண்டி நெய்யில் பொன்னிறமாகும் வரை வறுத்து எடுக்கவும். தயாரிக்கப்பட்டுள்ள மைதா, பேகிங் பவுடர், வெண்ணெ முதலிய கலவையுடன் தேங்காயை சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
3. அத்துடன் ½ கோப்பை நறுக்கிய அக்ரோட்டையும் வனில்லா எஸ்ஸென்ஸையும் சேர்க்கவும். நன்றாகக் கலக்கவும். அதை நெய் தடவிய சிறு அச்சுகளில் ஊற்றவும். மிஞ்சியுள்ள அக்ரோட்டால் அதை அலங்கரிக்கவும். அடுப்பில் வைத்து 12-15 நிமிடங்கள் வரை வாட்டவும்.

OBM—1949 TM

**இலவசம்! பக்குவ முறை நூல் நெ. 5**
தயவுசெய்து இன்றே ஒரு பிரதிக்கு எழுதுக :
**உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.**



பப்ளிஸிடி டிபார்ட்மென்ட்
**கார்ன் பிராடக்ட்ஸ் கோ, (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஶ்ரீ நிவாஸ் ஹவுஸ்,
எச். ஸோமானி மார்க், பம்பாய் 400001

# கல்கி





மேலட்டை: நீலக் கடற்கரையில் நிறபேதமில்லாத நட்பின் நடை.

வண்ணப்படம்: ஆர்.பி.எஸ். மணி



## பொருளடக்கம்

பிரமாதீச, ஆடி 28 ○ ஆகஸ்ட் 12, 1973







மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்டின் காரியதரிசி ஸ்ரீ ஆர். நடராஜன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **என். ராமச்சந்திரனுக்கும்,** செகந்திராபாத் ஸ்ரீ என். சுந்தரேச அய்யர் அவர்கள் குமாரத்தி மசௌ. **ராஜேஸ்வரிக்கும்** குருவாயூரில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அதை ஒட்டி மேட்டூர் டாம் M. C. I. C. Ltd., ஆபீஸர்ஸ் காலனியில் நடைபெற்ற வரவேற்பு வைபவத்துக்கும் நகரப் பிரமுகர்கள், உறவினர்கள், நண்பர்கள் விஜயம் செய்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர். லால்குடி ஜெயராமனின் வயலின் கச்சேரியும், அக்னிஹோத்திரம் ஸ்ரீராமானுஜ தாத்தாச்சாரியார் அவர்களின் உபந்நியாசமும் வரவேற்புக்கு மேலும் சிறப்பளித்தன.

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

'காஹ்ரா' மற்றும் 'துப்பட்டா'களின் பரம்பரை நாகரீக கவர்ச்சிக்கு
புதிய எழிலூட்டுகின்றன மபத்லாலின் 'மெஃப்ரின்' உடுப்புத் துணிகள்.
பாலியெஸ்டர் மற்றும் காட்டன் இழைகலந்த 'மெஃப்ரின்' பண்டைய
கற்பனைகளுக்கு, நவநாகரீக ஒயிலோடு கூடிய வண்ணம், வடிவம்
மற்றும் நெசவின் நேர்த்தியை இழைத்து, கிளர்ச்சியூட்டும்
மறுமலர்ச்சியை அளிக்கிறது!

**மபத்லால் க்ரூப்** அளிக்கும்
நேர்த்தியான துணிமணிகள்



**மெஃப்ரின்**
பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்
உடுப்புத் துணிகள்

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 33 - இதழ் 2

# ராவல்பிண்டி நாடகம்; தில்லியில் தொடரும்!

ராவல்பிண்டியில் எட்டு நாட்கள் நடைபெற்ற இந்தியா — பாகிஸ்தான் பேச்சு வார்த்தைகள் எவ்வித முன்னேற்றமும் காண முடியாமல் தோல்வியே அடைந்தன என்பது நிதர்சனமாகத் தெரிந்திருந்தும், அதை மூடி மறைக்க ஒரு நாடகமே நடத்தப்பட்டிருக்கிறது. வருகிற பதினெட்டாம் தேதி புது தில்லியில், பேச்சு வார்த்தைகளை மீண்டும் தொடங்குவார்கள் என்று அறிக்கை கூறுகிறது. ராவல்பிண்டியில் முடிவு காண முடியாத விஷயங்களுக்குப் புது தில்லியில் எப்படி முடிவு காணப் போகிறார்கள் என்பது இன்னமும் புதிராகவேதான் இருக்கிறது. பங்களா தேச முதல்வருடன் ஆலோசனை செய்வதற்கு இந்த இடைக்காலம் இந்தியாவுக்கு அவகாசம் அளிக்கும். இதன் மூலம் ஏதாவது முன்னேற்றத்துக்கு வழி ஏற்படுமேயானால் எல்லாருக்கும் நன்மையே.

பேச்சு வார்த்தைகளில் முன்னேற்றம் காணாததற்குக் காரணங்களும் நன்றாகத் தெரிந்தவையே. பங்களா தேசத்தை அங்கீகரிக்க அதிபர் பூட்டோ இன்னமும் தயாராக இல்லை. தக்க சமயத்தில் அங்கீகாரம் அளிக்க பாகிஸ்தான் தேசிய சபை அவருக்கு அனுமதி அளித்திருந்தும், அந்தத் ''தக்க சமயம்'' இன்னும் வரவில்லை என்றே அதிபர் பூட்டோ கருதுகிறார்.

இதன் விளைவாக, பாகிஸ்தானில் உள்ள வங்காளிகளை வங்க தேசத்துக்குத் திருப்பி அனுப்புவதும், அதே போல், வங்க தேசத்தில் உள்ள பீஹாரி முஸ்லீம்கள் எனப்படும் பாகிஸ்தானிப் பிரஜைகளைப் பாகிஸ்தானுக்கு அனுப்பி வைப்பதும் அந்தரத்தில் நிற்கின்றன. உற்றுநோக்கில் இந்த இரண்டு பிரச்னைகளிலும் இந்தியாவுக்கு நேரடி சம்பந்தம் இல்லை. இவ்விரண்டுமே மனிதாபிமானத்தின் அடிப்படையில் பாகிஸ்தானும் பங்களா தேசமும் நேரடியாகப் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டிய பிரச்னைகளாகும். இவ்விரண்டு நாட்டுப் பிரதிநிதிகளும் பேசித் தீர்த்து, முடிவு காண வேண்டிய விஷயத்தில், பங்களாதேசப் பிரதிநிதியைக் கலந்து கொள்ளச் செய்யாமல், மூத்தரப்புப் பேச்சு வார்த்தைகளை இரு தரப்புக் கூட்டமாக நடத்தினால் எந்தவித முன்னேற்றம் ஏற்படும்? இவ்விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்குக் கூட இந்தியாவுக்கு உரிமையோ, அதிகாரமோ இல்லை என்று சொல்ல வேண்டும். அயல்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதில்லை என்ற நமது கொள்கையும், இம்மாதிரிப் பிரச்னைகளில் நாம் தீவிரமாக ஈடுபடுவதை அனுமதிக்காது. ஆகவே இந்த இரண்டு அம்சங்களையும் பேச்சு வார்த்தைகளிலிருந்து நீக்கிவிட்டால் ஒருகால் இந்தியா — பாகிஸ்தான் இருதரப்புப் பேச்சு வார்த்தைகள் மூலம் நம்முடைய பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்வதில் முன்னேற்றம் ஏற்படக் கூடும்.

இதனால் இந்தியா — பங்களாதேச நல்லுறவு பாதிக்கப்பட்டு விடுமோ என்று ஐயப்படத் தேவையில்லை. இரு நாடுகளுக்குமிடையே நிலவும் நட்பும் நல்லுறவும் உறுதியாகவே உள்ளன. எனினும் இந்த நட்பு காரணமாகச் சுதந்திர நாடான பங்களா தேசத்தின் பிரச்னைகளைத் தீர்க்க இந்தியா வக்காலத்து வாங்கிக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. இந்த உபகண்டத்தில் அமைதி நிலவச் செய்ய வேண்டும் என்ற அடிப்படையில்தான் முன்பு கூட்டறிக்கை விடப்பட்டது. ஆனால் பாகிஸ்தானின் இப்போதுள்ள சண்டித்தனம் நீடிக்கும் வரையில் இந்தியா தனது பிரச்னைகளை மட்டும் தீர்த்துக் கொள்வதில் அக்கறை காட்டுவதே பலன் தரக் கூடும்.

இந்தியாவைப் பொறுத்தவரையில் போர்க் கைதிகளின் பிரச்னைதான் முக்கியமானது. இவ்விஷயத்தில் இப்போதுள்ள நிலைமையைக் குறித்து நாம் சந்தோஷப்பட முடியாது. விசாரணைக்குத் தேவைப்படுபவர்களை பங்களா தேசத்துக்கு உடனடியாக அனுப்பி விட்டு, மற்றக் கைதிகளைப் பாகிஸ்தா

னுக்கு அனுப்பிவிடுவது பிரச்னையைச் சுலபமாக்கிவிடும். ஆனால், இந்தியா—பங்களாதேசக் கூட்டு ராணுவத் தலைமைக்குத்தான் போர்வீரர்கள் சரணடைந்தனர் என்ற அடிப்படைக் கருத்தை நாமும் பங்களாதேசமும் கடைப்பிடிக்கும் வரையில் நாம் ஒருதலைப் பட்சமாக முடிவெடுக்க முடியாது. பங்களாதேசத்தின் ஒப்புதல் அவசியமாகும். இந்த இக்கட்டான நிலைமையில் போர்க் கைதிகள் எல்லாரையுமே பங்களாதேசத்துக்கு அனுப்பிவிட்டு, யுத்தக் கைதிகள் பிரச்னையைப் பங்களாதேசமே தீர்த்துக்கொள்ளும்படி விட்டுவிடுவது மேல்.

போர்க் கைதிகள் விசாரணையைப் பங்களா தேசம் கைவிட வேண்டும் என்பதற்காகப் பாகிஸ்தானில் அடைபட்டுக் கிடக்கும் வங்காளிகளைப் போர்க் கைதிகளுக்குப் பணயமாக்கக் கருதி, அவர்களைப் பாகிஸ்தான் துன்புறுத்துவது அக்கிரமமான செயல்முறை, அடாத நடவடிக்கை என்பதை எவரும் மறுக்க மாட்டார்கள். குற்றமிழைத்தவர்கள் மீது விசாரணை நடத்தும் உரிமை பங்களா தேசத்துக்கு உண்டு என்பது பாகிஸ்தானுக்குத் தெரியும். ஆனாலும், விசாரணையைக் கைவிட வேண்டும் என்று பாகிஸ்தான் கோருகிறது. இவ்விசாரணையைக் கைவிடுவதற்கில்லை என்ற உறுதியுடனே பங்களா தேசப் பிரதமர் இருக்கிறார். இந்நிலையில் விசாரணையை மேலும் காலதாமதமாக்காமல் துரிதமாகவே நடத்துவது நல்லது. ஆனால் பாகிஸ்தானுக்கும் பங்களா தேசத்துக்குமிடையே நல்லுறவு இதனால் வளராது என்பதும் திண்ணம்.

இம்மாதிரியுள்ள சூழ்நிலையில் புதுதில்லியில் நடைபெறும் பேச்சு வார்த்தைகளில் எவ்விதத்தில் முன்னேற்றம் ஏற்பட முடியும்? முன்னேற்றம் ஏற்படக்கூடிய நம்பிக்கையான சூழ்நிலை இன்னமும் உருவாகாதபோது புதுதில்லிப் பேச்சு வார்த்தைகள் வீண் முயற்சியாகவே முடியும். முறிந்து போகும் பேச்சுக்களினால் பாகிஸ்தான் — இந்தியாவுக்கிடையே ஏற்கனவே உள்ள விரோத மனப்பான்மை போதாதென்று மேலும் மனக்கசப்பு வளரும். உருப்படியான பலன் ஏற்படாது என்றால், ஆகஸ்டுப் பேச்சு வார்த்தைகளை ஆதரவான சூழ்நிலை உருவாகும்வரையில் தள்ளிப் போடுவதுகூட நல்லது.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## திருச்சி நகரசபையும் மாநில அரசாங்கமும்

சிறிது காலமாகத் திருச்சிராப்பள்ளி நகரசபை எது செய்தாலும் அதனோடு மோதுவது அல்லது எதிர்ப்பது என்பதுதான் மாநில அரசாங்கத்தின் வழக்கமாக இருந்து வருகிறது. தென்னாட்டில் உள்ள பெரிய ஊர்களில் ஒன்றும், தி. மு. க. அல்லாத கட்சியால் ஆளப்படுவதுமாகிய அந்த நகர்சபை எல்லா விதத்திலும் அநாவசியமாகச் சோதனைக்குள்ளாக்கப்படுகிறது. இப்போது மீண்டும் ஒரு தெருவுக்குப் பெயர் வைப்பது தொடர்பாக அந்த நகரசபையை மாநில அரசாங்கம் வம்பு செய்வதாகத் தெரிகிறது. திருச்சியில் தில்லை நகரையும், தென்னூரையும் இணைக்கும் சாலைக்குப் பிரபல சுதந்திரப் போராட்ட வீரரான டாக்டர் சுவாமிநாத சாஸ்திரியின் பெயரைச் சூட்டி அந்தத் தியாகியைக் கௌரவிப்பது என முடிவு செய்து இந்திய சுதந்திர தின வெள்ளி விழாவை ஒட்டி (ஆகஸ்டு 15, 1972) இச்சாலை திறக்கப்பட்டது. 'சாஸ்திரி' என்பது ஜாதிப் பெயர் எனவும், 'நகர சபைகள் தெருக்களுக்கு ஜாதிப் பெயர்கள் வைப்பதைத் தவிர்க்க வேண்டும் என 1970ம் ஆண்டு ஏப்ரல் மாதம் உத்தரவிடப்பட்டிருக்கிறது என்றும் கூறி, மறு பரிசீலனைக்குப் பின் பிரேரணையை அனுப்பி வைக்க வேண்டும் என்று சர்க்கார் திருச்சி நகர சபைக்கு எழுதியிருக்கிறதாம்.

திண்டுக்கல்லில் சமீபத்தில் நடந்த தேர்தலில் கூட ஜாதிவாரியாகத் தாங்கள் செய்த நன்மைகளை அந்தந்த ஜாதியினர் அதிகமாக உள்ள பகுதிகளில் மண்டல மக்கள் தொடர்பு அதிகாரியின் பெயரிட்டு விளம்பரம் செய்த தி. மு. க.வினர்தான் இப்போது இந்த நாடகத்தையும் ஆடுகின்றனர். பார்க்கப்போனால் 'சாஸ்திரி' என்ற பெயரின் அர்த்தம் சாதியைக் குறிப்பது அல்ல. லால்பஹாதுர் சாஸ்திரி, போலா பஸ்வான் சாஸ்திரி ஆகிய பெயர்களே உதாரணம். இது பற்றி ஒரு கட்டுரையில் திரு பக்தவத்சலம் கூறியிருப்பது போல் இங்குள்ள உயர்நீதி மன்றத்தில் ஒரு நீதிபதி தமது இனிஷியல்களோடு முதலியார் என்று மட்டுமே குறுகிய பெயரை வைத்திருப்பதை ஒப்ப அந்தக் காலத்தில் மேலே குறிப்பிட்ட திருச்சி சுதந்திரப் போராட்ட வீரர், 'டாக்டர் சாஸ்திரி' என்று மட்டுமே சுருக்கமாக அழைக்கப்பட்டார். வெறுமனே 'டாக்டர் சாமிநாதன் தெரு' என்று மட்டும் அழைத்தால் அது அந்தச் சுதந்திரப் போராட்டக் காலத்து வீரர் சாமிநாத சாஸ்திரியை ஞாபகம் ஊட்டாமலும் போய்விடலாம். சாதி வெறி கொண்ட அரசியலை நடத்தியே லாபம் சம்பாதித்த இப்போதைய ஆளும் கட்சிக்கு

பனங்காய் தலையில் குருவி!

மாருதம் வீசும்னு நினைச்சா புயலடிக்குதே!

மாருதி தொழிலகம் ஊழல் பற்றிய புகார்கள்

இந்திரா பிரபையில் கிடைத்த மூலதனம்— சலுகைகள்

என்னையும் அழைச்சுக்கிட்டு ஹெலிகாப்டரில் எப்படி ஏறுறாங்க, பார்த்துடுவோம்!

உதவி! உதவி!

சோஷலிஸப் பொருளாதாரப் பாலைவனம்....

எல்லாம் சாதியாகவே தெரியலாம். சாஸ்திரி நகர் என்று பெயர் இல்லையா? தெருக்களுக்கு எத்தனை ஆயிரம் சாதிப் பெயர்கள் இங்கே உள்ளன. சுதந்திரப் போராட்ட வீரர் ஒருவர் ஒரு குறிப்பிட்ட சாதியைச் சேர்ந்தவராக இருப்பது அவருடைய பாவமா என்ன?

இதையெல்லாம் விடப் பெரிய வேடிக்கை என்னவென்றால், ஒரு பாலத்துக்கு 'முத்து ராமலிங்கத் தேவர் பாலம்' எனப் பெயர் சூட்டப்படும் என்பதாக முதலமைச்சரே பேசியிருக்கிறார். அவர் ஏன் அதை 'முத்து ராமலிங்கம் பாலம்' என்று மட்டுமே வைக்கக் கூடாது?

இந்த விஷயத்தில் தான் ஏற்கனவே வைத்த 'டாக்டர் சாமிநாத சாஸ்திரி சாலை' என்ற பெயரை மறு பரிசீலனை செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்று துணிவாக முடிவு எடுத்த திருச்சி நகர சபையைப் பாராட்டுகிறோம். மத்திய அரசை நோக்கி மாநில சுய ஆட்சிக் கூக்குரலைப் போட்டுக் கொண்டே மாநிலத்தில் உள்ள நகரசபைகள் தெருவுக்கு வைக்கும் பெயர்களில் கூடத் தலையிட்டுக் கொண்டு வம்பு செய்யும் தி. மு. க. ஆட்சியில் நியாயங்கள் எப்படி எப்படியெல்லாம் ஒரு வழிப் பாதையாக இருக்கின்றன என்பது புரிகிறது. திருச்சி நகரசபை அண்ணா சாலை, கருணா சாலை என்றெல்லாம் பெயர்கள் வைத்துவிட்டுச் சிவனே என்று இருந்திருந்தால் இப்படி வம்பு வந்திருக்காதோ என்னவோ?

## இதுதான் மக்கள் சேவையா?

பாங்குகள் தேசிய மயமாக்கப்பட்டதன் 4-வது ஆண்டு விழாவைக் கொண்டாடுவதாகப் பத்திரிகைகளில் தேசிய மயமான பாங்குகளின் விளம்பரம் வந்த மறு வாரமே ஒரு சனிக் கிழமையன்று சென்னை நகரிலுள்ள பெரிய பாங்குகள் திடீரென்று அநுதாப வேலைநிறுத்தம் செய்தன. அந்த வேலைநிறுத்தம் இரண்டு மணி நேரம் நீடித்தது. சனிக் கிழமை வேலை நேரமே 10 முதல் 12 வரை இரண்டு மணி நேரம் மட்டும்தான். அதற்கு முன்னாலும் பல நாட்கள் பாங்கு ஆஃப் மதுரை லிமிடெட் விஷயமாக அநுதாப வேலை நிறுத்தத்தால் 'கிளியரிங் ஹவுஸ்' வசதியின்றி வாடிக்கைக்காரர்கள் சிரமப்பட்டார்கள். இப்போது 'சவுத் இந்தியன் பாங்க் லிமிடெட்' விஷயமாக அநுதாப வேலைநிறுத்தமாம். தொழில் தகராறுகளைத் தீர்க்கத் தொழில் நீதிமன்றங்கள் உள்ளன. அந்தத் தொழில் தகராறுகளைப் பொதுமக்களும் வாடிக்கைக்காரர்களும் உண்டாக்கவில்லை. வாடிக்கைக்காரர்களும் பொதுமக்களும் என்ன பாவம் செய்தார்கள்? சனிக்கிழமை பணம் எடுத்து வேலையாட்களுக்கு வாராந்தரக் கூலி தர இருக்கும் ஒரு சிறு தொழில் உரிமையாளர் சனியன்று இரண்டு மணி நேரமும் பாங்கு வேலை செய்யா விட்டால் என்ன விதமாகப் பணம் பெற முடியும்? 'மக்கள் சேவையில் தேசிய மயமாக்கப்பட்ட பாங்குகளின் 4வது ஆண்டு' என்று அழகாக வாசகம் எழுதிவிட்டு மக்களைத் தவிக்க விட்டார்கள்! தேசியமயம் என்பது மக்களின் திண்டாட்ட மயம்தான்.

## நியூயார்க்கில் கோவில்

ஐ. நா. சபையில் பணி புரியும் டாக்டர் அழகப்ப அழகப்பனின் முயற்சியாலும், சி.வி. நரசிம்மன் போன்ற பிரமுகர்களின் ஆதரவினாலும் நியூயார்க்கில் கட்டப்பட விருக்கிற கோவிலுக்கான கருங்கற்கள் தமிழ் நாட்டிலிருந்து அமெரிக்கா செல்ல ஏற்பாடாகியிருக்கிறது. ஸ்தபதிகளும் செல்கின்றனர். கோவிலுக்கான 200 டன் கற்கள் ரயில், கப்பல் மூலம் நியூயார்க் போய்ச் சேர மட்டும் ஒரு லட்சத்து அறுபத்தெட்டாயிரம் ரூபாய் செலவாகிறது. இப்பணிக்காக ஆலய அமைப்பு நிபுணர் தேவகோட்டை எஸ். எம்.

முன்னேற்றம்!




கூட்டிக்கிட்டுப் போய் மறுபடியும் டில்லியிலே மாட்டி வைக்கிறேன், வந்து சேருங்க!




ரயில் நம்மை விட்டுட்டு ஓடுதே! நாம்தான் அதைத் தொடர்ந்து போய்ப் பிடிக்கணும் போலிருக்கு!

?!






கணபதியும் மற்றும் இருபது சிற்பிகளும் அமெரிக்கா செல்வார்கள் என்று தெரிகிறது.

சிவன் கோவில் தவிர நியூயார்க்கில் இருந்து நானூறு மைல் தொலைவிலுள்ள பிட்ஸ்பர்க் என்னும் நகரில் சற்று உயரமான நிலப் பகுதியில் ஏழுமலையான் கோவில் ஒன்றும் கட்டப்படும் என்றும் இதற்கு ஆந்திர அரசாங்கம் ஏழு லட்ச ரூபாய் நிதி உதவி செய்யும் என்றும் அறிவித்திருக்கின்றனர். நியூயார்க்கில் சைவ வைணவக் கோவில்கள் அமைவது நமக்கு எவ்வளவோ பெருமை தரக்கூடிய விஷயமாகும்.

## ஸ்ரீயா அருளா ?

ஸ்ரீ கபாலீசுவரர், ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாள் போன்ற பெயர்களை இனி அருள்மிகும் கபாலீசுவரர், அருள்மிகும் பார்த்தசாரதிப் பெருமாள் என்று மொழிபெயர்த்துச் சொல்ல வேண்டும் — எழுத வேண்டும் என்று உத்தரவிடத் தமிழ்நாட்டு ஆட்சி முடிவு செய்திருப்பதாகச் சொல்லப் படுகிறது. இவையெல்லாம் வழி வழியாக வந்த புனித விஷயங்கள். இவற்றை வெறும் உத்தரவுகள் மூலம் மாற்ற முயல்வதோ, மக்கள் நன்மைக்கான வேறு திட்டங்களைச் செயலாற்றக் கையாலாகாத அரசாங்கம் ஒரு திசை திருப்பு வேலையாகச் செய்வதோ சரியில்லை. மொழி பெயர்ப்பு என்ற பெயரில் அபத்தமான காரியங்களைச் செய்யலாகாது. ஆகமம், விதிமுறைகள் பற்றி விவரம் தெரிந்தவர்கள் அமைத்த பழம் பெயர்களை வெறும் அதிகாரத்தை மட்டுமே கையில் வைத்துக் கொண்டு நினைத்தபடி மாற்றிவிடுவது நாகரிகமான செயல் ஆகாது. வறட்டு ஜம்பம்தான்.

## பெருமையும், சிறுமையும்

பெங்களூரிலிருந்து 28-7-73 அன்று மாலை முன்னாள் துணை மந்திரி குருபாதசாமி சென்னை வந்த இரயிலை வேலைநிறுத்தம் காரணமாகப் பெரம்பூரிலேயே நிறுத்திவிட்டார்கள். அவரும் அமைதியாக இறங்கித் தம்மை வரவேற்கப் பெரம்பூரைத் தேடி வந்திருந்த காங்கிரஸ் ஊழியர்களோடு நகருக்குள் வந்துவிட்டார். தங்கள் தலைவர் வந்த இரயில் பெரம்பூரிலேயே நின்றுவிட்டதே என்று காங்கிரஸ் ஊழியர்கள் உடனே அந்த ரயில்மேல் கல்லெறிந்து, கார்டை அல்லது டிரைவரைக் காயப்படுத்திவிடவில்லை. இது பெருமைக்கு உதாரணம்.

ஆனால் அதற்கு முன்தினம் ராஜபாளையம் நிலையத்தில் ரயிலிலிருந்து இறங்கி கார்டு, ஸ்டேஷன் மாஸ்டர் யாரிடமும் தகவல் கூறாமல் தம்மை வரவேற்க வந்த கும்பலிடம் பேசியும் மாலை போட்டுக் கொண்டும் முதல்வர் கருணாநிதி நேரம் கடத்தவே ராஜபாளையத்தில் ரயில் நிற்கும் நேரம் முடிந்து சிறிது தாமதமும் ஆகிவிட்டதால் கார்டு விசில் கொடுத்து ரயில் புறப்பட்டு விட்டது. மேலே பயணத்தைத் தொடர இருந்த முதல்வரை ராஜபாளையம் நிலையத்திலேயே விட்டுவிட்டு ரயில் சிறிது தூரம் வரை போய்விட்டது. பிறகு அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்து ரயிலை நிறுத்தி அந்த இடம் வரை முதல்வர் நடந்துபோய் ரயிலேறி வர நேர்ந்திருக்கிறது. இதில் சீற்றமடைந்த தி. மு. க. ஆட்கள் கல்லெறிந்து கார்டு, என்ஜின் டிரைவர் காயமடையும்படி தாக்க முயன்றதாகத் தெரிகிறது. கார்டும் என்ஜின் டிரைவரும் தவறு என்ன செய்தார்கள்?

கடந்த காலத்தில் சில ரயில்வே லெவல் கிராஸிங்குகளின் அருகே காரில் பிரதமர் நேருவே காத்திருந்தபோதும் கதவைத் திறந்து (சட்டத்துக்குப் புறம்பாக) அவருக்கு வழி விடாமல் இரயில் சென்ற பின்பே வழி விட்ட கேட்-காவலாளிகள் உண்டு. அவர்களை நேருஜீ பாராட்டியிருக்கிறார். தட்டிக் கொடுத்திருக்கிறார். இதுவே பண்பாடு.

## வருந்துகிறோம்

ராஜாஜியால் நாற்பத்தி எட்டு வருடங்களுக்கு முன் தொடங்கப்பட்ட திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தின் டிரஸ்டி-பொக்கிஷதார் திரு எம். கே. வேங்கடராமன் அண்மையில் தேக வியோகமானார். இவரும் இவரது மனைவியாரும் 1930-32ல் சத்தியாக்கிரகப் போரில் சிறைவாசம் பெற்றவர்கள். காந்திய நெறியில் வாழ்ந்து ராஜாஜியின் அருளாணைப்படி கிட்டத்தட்ட ஒரு பொன் விழாக் காலம் அரும்பணியாற்றியவர் வேங்கடராமன். காந்தி ஆசிரமத் தொண்டர்கள் அவரை முன்மாதிரியாகக் கொண்டு சேவையைத் தொடர வேண்டும்.

### ராஜாஜி சிந்தனை

பொது இடங்களில் பேசுவதற்கும், தனிப்பட்ட முறையில் சம்பாஷிப்பதற்கும் இடையே வித்தியாசம் இருப்பதாக நினைத்துவிடாதீர்கள். இரண்டுக்கும் வித்தியாசம் கிடையாது. பொது இடங்களில் பேசும்போது எவ்வளவு கட்டுப்பாடுடனும் ஜாக்கிரதையுடனும் பேசுவோமோ அதே போல் தனிப்பட்ட சம்பாஷணையிலும் நடந்துகொள்ள வேண்டும். இவை அன்றாட நடத்தையின் ரகசியங்களாகும். இது ஏதோ புதுமையாகத் தோன்றலாம்; ஆனால் உண்மையில் அப்படியல்ல. மகாத்மா காந்தியிடம் நான் கற்றுக்கொண்ட பாடம் இதுதான். சரியான ஒன்று எல்லாச் சூழ்நிலைகளிலும் சரியாகத்தான் இருக்கும். ஒவ்வொரு துளி நீராகச் சேர்ந்துதான் சமுத்திரமாகிறது. அதேபோல் ஒவ்வொரு பேச்சும், ஒவ்வொரு சம்பாஷணையும் சேர்ந்துதான் தேசிய வாழ்வு உருவாகிறது. நமது தேசிய வாழ்வைப் பரிசுத்தப்படுத்துவோம்.

# ஃப்யூராடான் உபயோகித்தால் அதிக நெல் விளைச்சல்

**டாடா ஃபைஸன் ராலிஸ் வழங்கும் புதிய ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள் நெற்பயிரைத் தாக்கும் பூச்சிகளைக் கொல்லுகின்றன. இவை பயிர் முழுவதும் பரவி செயலாற்றுவதோடு, அதிக பச்சையான நெல்லைத் தருகின்றன. மற்ற பூச்சிக் கொல்லிகள் தருவதைவிட ஹெக்டேருக்கு 3 மெட்ரிக் டன்னுக்கும் அதிகமாக விளைச்சல் தருகின்றன.**

உலகெங்குமுள்ள நெற்பயிர் விளையும் பிரதேசங்களில் மிகச் சிறந்த பூச்சிக் கொல்லி என்று போற்றப்படுகின்றன, ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள். இவை பயிர் முழுவதும் பரவும் நச்சியல்பு கொண்டவை. இவற்றை நிலத்திலும் நெல் வயலிலுள்ள நீரிலும் போட்டால், வேர்கள் மூலம் பயிர்கள் அவற்றை உறிஞ்சி, பயிர் முழுவதும் பரப்புகின்றன. இதனால் இந்தப் பயிரைக் கடித்து மெல்லும், துளைக்கும் மற்றும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகள் கட்டுப்படுத்தப்படுகின்றன.

உங்கள் நெற்பயிருக்கு சிக்கனமான புதிய முறை, அதாவது விதைகளை/நாற்றுக்களைத் தோய்த்து எடுக்கும் முறைபற்றி உங்கள் வியாபாரியைக் கேளுங்கள். அதை ஒரு முறை கையாண்டு பாருங்கள். வியப்பூட்டும் பலன்களைக் கண்டு நீங்கள் அதிசயிப்பீர்கள்.

வியாபார விவரங்களுக்கு எழுதுக:
**ராலிஸ் இந்தியா லிமிடெட்**
ஃபெர்டிலைசர்ஸ் & பெஸ்டிசைட்ஸ் டிவிஷன்,
21, ரேவின் ஸ்ட்ரீட்,
பம்பாய் 1.

மற்ற இடங்கள்: சென்னை, கல்கத்தா, லக்னௌ —

**TATA FISON RALLIS**

**விசேஷ சிறப்பம்சங்கள்:**

ஃப்யூராடான் 3ஜீ குருணைகள் மேலைத் தூவப்படும் பூச்சிக் கொல்லிகளை விடச் சிறந்தவை; மிகவும் பயனுள்ளவை.

- நெற்பயிரைத் தாக்கும் தண்டு துளைப்பான், தத்துப் பூச்சி, ஆனைக்கொம்பன், அரிக்கும் பேன் ஆகிய பெரும்பாலான பூச்சிகளைக் கட்டுப்படுத்துகின்றன
- விசேஷ கருவிகளின் உதவியின்றிக் கையாலேயே இந்த மருந்தை எளிதில் பத்திரமாகப் போடலாம்.
- கடித்து மெல்லும் பூச்சிகளையும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளையும் கட்டுப்படுத்துகின்றன.
- பூச்சிகளை விரைவில் கொல்லுகிறது; பயிர் முழுவதும் உட்டமைப்பாகப் பரவி விடுகின்றன.
- இக் குருணைகளை மழை அடித்துச்செல்ல முடியாது. தெளிப்பு மருந்துகளைவிட நீண்ட காலம் பாதுகாப்புத் தருகின்றன.
- தானிய மணியில் மருந்து நச்சினை சேர்ந்துவிடச் செய்யாது.
- இலை பயிரை அழிக்கும் பூச்சிகளை கட்டுப்படுத்தும்; பயிருக்கு சாதகமான பூச்சிகளுக்குத் தீங்கு செய்யாது.




## அதிக நெல் விளைச்சல் பெற... ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள்

OBM-0275 TAM




ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி
காமகோடி சங்கராசாரிய
ஸ்வாமிகள்

ஒவ்வொரு காரணத்துக்கும் ஒரு விளைவு இருக்கிறது. பௌதிக விஞ்ஞானம் முழுவதும் இந்தக் காரணம் – விளைவு (cause & effect) பற்றிய விதிகளைக் குறித்ததேயாகும். மாற்ற முடியாத இந்த விதிகளாலேயே உலகம் நியதியுடன் இயங்குகிறது. ஏதோ ஒரு பேரறிவு இருப்பதால்தான் இப்படிப்பட்ட விதிகள் உண்டாகி, அவை எல்லாம் ஒழுங்காக இணைந்து, உலக வாழ்வு ஏற்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. பௌதிக உலகில் காரணம் – விளைவு என்கிற தவிர்க்க முடியாத சங்கிலி இருந்தால் மனித வாழ்க்கையிலும் அது இருந்துதானே ஆக வேண்டும்? நாம் செய்கிற சகல காரியங்களுக்கும் விளைவு இருந்துதான் ஆக வேண்டும். நல்ல காரியங்கள் செய்தால் அதற்குச் சமமான நல்ல விளைவுகளைப் பெறுவோம். கெட்டதைச் செய்தால் அதற்குச் சமமான கெட்ட பலன்களைப் பெறுவோம். இப்படிப் பலனைத் தருகிற 'பலதாதா'தான் பிரபஞ்சத்தை நடத்தி வைக்கிற மகாசக்தி, ஈசுவரன், பகவான், ஸ்வாமி, கடவுள்.

மனசு இருக்கிற வரையில் அது சஞ்சலித்துக் கொண்டேதான் இருக்கும். நல்லதோடு கெட்டதையும் நினைக்கத்தான் செய்யும். புண்ணியத்தோடு பாபத்தையும் செய்து கொண்டேயிருக்கும். இந்தப் பாபத்துக்கு விளைவாகக் கஷ்டங்களை நமக்கு ஈசுவரன் தந்துகொண்டுதான் இருப்பான். கஷ்டங்களைப் போக்கடிப்பதற்காகவே பொதுவில் எல்லாரும் பிரார்த்தனை செய்கிறார்கள். இதைத்தான் பக்தி என்று நினைக்கிறார்கள். ஈசுவரன் மனசு வைத்தால் நம் பாபத்துக்குப் பிரதியான கஷ்டத்தைத் தராமலும் இருக்கலாம். ஆனால் அவன் கஷ்டத்தைப் போக்கத்தான் வேண்டும் என்று நிர்ப்பந்தம் செய்ய நமக்கு யோக்கியதை இல்லை. கஷ்டம் வந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல் இருக்கிற மனோபாவத்தைப் பிரார்த்திப்பதே இதைவிட உத்தமமாகும். ஆனால் இந்தப் பிரார்த்தனை கூடப் பூரண பக்தி அல்ல.

நம் கஷ்டத்தை ஈசுவரனிடம் சொல்கிறபோதே அவனுக்கு அது தெரியாது என்று நாம் நினைப்பதாக ஆகிறது. அதாவது ஈசுவரனுடைய எல்லாம் அறிந்த சர்வக்ஞத்துவத்துக்குக் குறை உண்டாக்குகிறோம். 'இந்தக் கஷ்டத்தைப் போக்கு; அல்லது கஷ்டத்தைப் பொருட்படுத்துகிற மனப்பான்மையை மாற்று' என்கிறபோது நாம் கேட்டுத்தான் அவன் ஒன்றைச் செய்கிறான் என்று ஆகிவிடுகிறது. அதாவது தானாகப் பெருகும் அவனது காருண்யத்துக்குக் குறை உண்டாக்கி விடுகிறோம். ஈசுவரனுடைய ஞானம், கிருபை இரண்டுக்கும் தோஷம் கற்பிக்கிற பிரார்த்தனை உண்மையான பக்தி இல்லை. ஆனாலும் இப்படிப்பட்ட பிரார்த்தனையால் நம்முடைய மனச்சுமை தாற்காலிகமாகவாவது இலேசாகி, கொஞ்சம் சாந்தி பிறக்கிறது! நாமாகவே எல்லாம் சாதித்துவிட முடியும் என்ற அகங்காரத்தை விட்டு ஈசுவரனிடம் யாசிக்கிற அளவுக்கு எளிமை பெறுகிறோமே, அதுவும் நல்லதே.

'நீ எப்படி விட்டாயோ அப்படி ஆகட்டும்' என்று சரணாகதி செய்வதுதான் பக்தி. தனக்கு என்று எதுவுமே இல்லாவிட்டால் மனசின் அழுக்குகள் நீங்கி, அது கண்ணாடி மாதிரி சுத்தமாக இருக்கும்.

பக்தி செய்வதற்கு இன்னொரு முக்கியமான காரணம்: அன்பு செலுத்தாமல் வாழ்ந்தால் அதில் ஆனந்தமே இல்லை. அன்பிலே உள்ள ஆனந்தம் வேறெதிலும் இல்லை என்று அநுபவத்தில் தெரிகிறது. ஆனால் நாம் யாரிடம் அன்பு வைத்தாலும், என்றோ ஒரு நாள் ஒன்று நாம் அவரை விட்டுப் பிரிகிறோம்; இல்லாவிட்டால் அவர் நம்மை விட்டுப் பிரிகிறார். ஆனந்த ஹேதுவாக இருந்த அன்பு அத்தனையும் அழுகை மயமாகி விடுகிறது. நம்மை விட்டுப் பிரியாத ஒரே சாசுவத வஸ்து ஈசுவரன்தான். அவனிடம் அன்பு வைத்து விட்டால்? இந்த அன்பு என்றும் சாசுவதமாக ஆனந்தம் தந்துகொண்டே இருக்கும். இந்த அன்பு முற்றுகிறபோது யாவுமே அவனாகத் தெரியும். ஒன்றிடம் அன்பு—அது காரணமாகவே இன்னொன்றிடம் துவேஷம்—என்றில்லாமல் எல்லாவற்றிடமும் ஏற்றத் தாழ்வில்லாமல் அன்பாக இருப்போம். அன்பற்ற வாழ்வு வாழ்ந்து மநுஷ்ய ஜன்மாவை விருதாவாக்கிக் கொள்ளாமல் இருக்க பக்தியே உதவுகிறது.

பக்தியால் படிப்படியாக லௌகிக கஷ்டங்களைப் போக்கடித்துக் கொள்ளலாம்; மனோபாவத்தை உயர்த்திக் கொள்ளலாம்; மனத்தின் அழுக்கைப் போக்கிக் கொள்ளலாம்; அலைகிற மனசை ஒருமுகப்படுத்தலாம்; ஈசுவரனின் கல்யாண குணங்களைப் பெறலாம்; சாசுவதமான அன்பைப் பெற்று ஆனந்திக்கலாம். எல்லாப் பற்றுக்கும் மேலாகக் கர்ம பலனைத் தருகிறவனைத் தஞ்சம் புகுந்தால்தான் அவன் கர்ம நியதிக்குக் கட்டுப்பட்ட பிரபஞ்சத்திலிருந்து நம்மை விடுவித்து முடிவில் முக்தி தருவான். பக்தி செலுத்துவதற்கு இத்தனை காரணம் இருக்கிறது.

இனி, காரணமே இல்லாத பக்தி ஒன்றும் இருக்கிறது.

**(அடுத்த இதழில்: காரணமில்லாத பக்தி)**

# தொடுவானம்

க. பஞ்சாபகேசன்

மதுரை ரயில் நிலையத்தில் சென்னை செல்லும் எக்ஸ்பிரஸ் வண்டிக்குக் கூட்டம் இருக்காதோ? அன்று விசித்திரம்தான். பெட்டிகளெல்லாம் வெறிச்சோடிக் கிடந்தன.

என்னதான் மதுரையிலிருந்து கிளம்பும் பகல் நேர எக்ஸ்பிரஸ் வண்டியாக இருந்தாலும் —

இப்படியா அங்கொருவர் இங்கொருவராக ஜன்னல்புறம் தலை நீட்டிக் கொண்டு உள்ளே முடங்கி உட்கார்ந்திருப்பார்கள்?

என் மனசில் ஏற்கனவே வேகமும் கொந்தளிப்பும் அதிகமாக இருந்தன. கையில் ஒரே ஒரு சிறு தோல் பெட்டி. அதற்குள் நான் அவசரம் அவசரமாகத் திணித்துக் கொண்ட இரண்டு, மூன்று புடவைகள்; சோளிகள் இத்தியாதி. ஒரு 'சீப்பு, பர்ஸ். அதற்குள் 'அவருடைய சம்பளத்திலிருந்து கடந்த சில மாதங்களில் நானே அக்கறையாகச் சேமித்தது ஆக' நினைத்த பணம். அதில் சென்னைக்கு டிக்கெட் வாங்கியது போக மீதி கணிசமாகவே இருந்தது.

வண்டி புறப்பட இன்னும் பத்து நிமிடங்கள் இருந்தன. பெண்கள் கம்பார்ட்மெண்டில் ஏற விருப்பம் இல்லை. பின் எந்த வண்டியில் ஏறுவது?

ஒரு முறை நீள நடந்தேன். ஒரு 'கம்பார்ட்மெண்ட்'. அநேகமாக முழுவதும் காலி. ஆனால் —

''அம்புஜு, தண்ணீர்க் கூஜாவை நினைவா எடுத்து வைச்சாயா?''

''நன்னாயிருக்கு. நீங்க ஒரு ஓவர்ஹெட் டாங்க் ஆச்சே. தண்ணீர்க் கூஜாவை எடுத்து வைக்க மறப்பேனா?''

''ஆமாண்டி, நான் ஓவர்ஹெட் டாங்க் தான். என் லைஃப்லே எத்தனையோ கட்டடங்களைக் கட்டியிருக்கிறேன். கண்டிராக்டர் — கம் — எஞ்சினீயர்..... இப்போ இந்த சந்தோஷமான பிரயாணத்தின் ஆரம்பத்திலேயே நமக்குள் எதுக்குக் கெடுபிடி? ஒரு டம்ளர் தண்ணீர் கொடு!''

நடுத்தர வயதைக் கடந்த தம்பதிகள். அப்படி மிகவும் வயதானவர்களும் அல்ல. அந்தக் கம்பார்ட்மெண்டில் நுழைந்து அவர்கள் உட்கார்ந்திருந்த பகுதியில் ஓர் ஓரத்தில் உட்கார்ந்தேன், கைப் பெட்டியை மேலே பெஞ்சியில் தள்ளிவிட்டு.

நான் வந்து உட்கார்ந்த உடனேயே என்னை இருவரும் கொஞ்சம் தீர்க்கமாகவே அளந்துவிட்டது எனக்குப் புரிந்தது.

எக்ஸ்பிரஸ் புறப்பட முதல் மணி அடித்துவிட்டது.

''ஸ்டேஷன் மாஸ்டருக்கு 'டாட்டா' காட்டுவோமா?'' என்றார் அவர்.

அந்த அம்மாள் சிரித்துக் கொண்டே, ''கல்யாணம் பண்ணி இருபத்தைந்து வருஷங்கள் ஆனதுதான் மிச்சம். உங்க குழந்தை புத்தி போகலே'' என்றாள்.

''அம்புஜு! ரயில் புறப்பட்டாச்சு. நாளைக் காலையிலே நாம நம்ம 'ஸில்வர் ஜூபிலி' கொண்டாடப் போறோம். இப்படிக் 'கசமுச' வேண்டாம்!'' என்று சொல்லிக் கொண்டே வெடிச் சிரிப்புச் சிரித்தார் அவர்.

அந்தச் சிரிப்பில் கலந்து கொண்ட அம்மாளும், ''மெதுவாப் பேசுங்கோ. சின்னப் பொண்ணு ஒண்ணு பக்கத்திலே இருக்கு'' என்றாள் மெதுவாகவும் அழுத்தம் திருத்தமாகவும்.

இவர்கள் இருபத்தி ஐந்து ஆண்டுகள் முடிந்து இருபத்தி ஆறாவது ஆண்டை இன்னும் இருபத்தி நாலே மணி நேரத்தில் தொடங்க மற்றுமொரு 'ஹனிமூன்' போகிறார்கள். நானோ? —

இருபத்தைந்து மாதங்களுக்கு முன்புதான் திருமணம் ஆயிற்று. மெட்ராசில் இந்த 'யானை விலை குதிரை விலை' நாளில் அமர்க்களமான கல்யாணம். அப்பா கொஞ்சமாவா செய்தார்? எழுபதாயிரம் ரூபாய்க்கும் மேல் செலவு. மாப்பிள்ளை மதுரை பாங்க் ஒன்றில், அந்த இளம் வயதிலேயே, கை நிறையச் சம்பளம் வாங்கும் ஏஜெண்ட். வாங்கிய பட்டங்களுக்கு இரண்டு வரி போதாது.

''மணி எட்டாகிறது. திண்டுக்கல் வரப் போறதேடி. கொஞ்சம் எலுமிச்சம் பழச் சாதம் தரயா?''

''பறக்க ஆரம்பிச்சுட்டேளே.....''

''ஹனிமூன்டீ.....''

''ஆமாமாம். மறந்துட்டுது. இதோ எடுத்துத் தரேன்.'' கொண்டு வந்திருந்த டிபன் காரியர்களில் ஒன்றைப் பிரித்தாள் அம்மாள்.

மேல் தட்டு முழுதும் தும்பைப் பூவைப் போல் வெளுத்திருந்த பொரித்த வடகமும் அப்பளமும். கீழ்த் தட்டில் அருமையான எலுமிச்சம் பழச் சாதம். அவர் சற்றே வெளியே எழுந்து போயிருந்த அந்த நேரத்தில் அம்புஜு அம்மாள் என்னிடம் மஞ்சள் முகத்தில் அமைந்த சிரிப்புப் பொங்கக் கூறினாள்:

''குழந்தைதான் எப்பவும். இவரோடு இருபத்தைந்து வருஷங்கள் மல்யுத்தம் போட்டுண்டு எப்படியோ நீந்தி அடிச்சு வந்துட்டேண்டியம்மா. எலுமிச்சம் பழச் சாதம்னா உசிர். எங்க வெள்ளிவிழா கல்யாண நாளாம். இரண்டாவது தேனிலவாம்! மெட்ராசிலே அறை எடுத்துத் தங்கணுமாம். தங்கை, தம்பி எல்லாரும் இருக்கா. ஆனா அவாளையெல்லாம் வெறுமனே 'விசிட்'தான் பண்ணணுமாம்....! சரி, நீ ஏண்டியம்மா இப்படி ஒரே ஒரு பெட்டியோடே புறப்பட்டு வந்திருக்கே? எங்களோடேயே நீயும் சாப்பிடலாம்...!''

அந்த அம்மாள் பேசிக் கொண்டே போனதன் முடிவில் அவர் வந்தார். நான், ''வேண்டாம், மாமி. நான் ஹெவியா டிபன் சாப்பிட்டு விட்டே புறப்பட்டேன். ஒண்ணும் வேண்டாம்'' என்றேன்.

மனம் அலை பாய்ந்தது. நெஞ்சின் ஆழத்துக்குள் புதைந்து விட்ட — நெஞ்சை ஆழ ஆழப் புதைத்த — அந்த முதல் நிகழ்ச்சி நினைவு வருகிறது...

மீனாட்சியின் சந்நிதானம். அம்பாள் எத்தனை உயரமோ அத்தனை அழகு! தோடுகளும் மூக்குத்தியும் நெற்றிப் பொட்டுமாக ஜொலிக்க, அந்த அபூர்வ தெய்விகச் சிவப்பு நிறப் புடவையில் அம்பிகையின் கோலத்தைத் தரிசித்துக் கொண்டிருந்த நான் அருகில் குரல்கள் கேட்கவும் திரும்பினேன் —

''சௌம்யா, நீயா?''

''பரத், நீங்களா?'' — பரத் என்பது என் கணவர். பாரத்வாஜன்.

எனக்கு அடுத்து சன்னிதியின் இரும்புக் கம்பியைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்த அவரை அடுத்து அவள், அந்த சௌம்யா.

உடனே முகத்தை மறுபடியும் அம்பிகையின் பக்கம் திருப்பினேன். மேலே என்ன பேசுகிறார்கள்...?

''பரத்! நாம் பார்த்து அஞ்சு வருஷம் ஆகியிருக்குமே! யூ ஆர் மார்வலஸ். கடைசி வருஷத்தில் இருந்ததை விட இப்போது அழகாக இருக்கிறாய்.''





''அப்படியா, சௌம்யா?''

என்னதான் நெடுநாட்கள் கழித்துச் சந்திக்கட்டுமே, இதென்ன அம்பிகை சன்னிதானமா? அல்லது...

''நான் எப்படி இருக்கேன், பரத்?''

''ஃபூல்! பருத்துவிட்டாய். கழுத்தில் தாலி மின்னுகிறது.''

''ஆனால் பரத், நீ எனக்கு எழுதியிருக்கிற காதல் கடிதங்களை யெல்லாம் பத்திரமாய் வைச்சிருக்கேன். என் கடிதங்களையெல்லாம் நீ என்ன பண்ணினாய்?''

எதிரே தீபாராதனை நடந்து கொண்டிருக்கிறது. அந்தப் பொன்னிறமான பேரொளியில் உலகத் தாயின் முகத்தில் ஒரு கணக்கம் தென்படுகிறதைப் போல் தோன்றுகிறதே, எனக்கு? என் உள்ளத்தின் அடித் தளத்தில் ஒரு நெருப்புத் துண்டு புரள்வதைப் போல்...

இவர் தீபாராதனையின்போது சேவிக்கக் கூட இல்லையா?... அவள் கேள்விக்கு இவர் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

''உன் கடிதங்களை நான் பாதுகாத்து வைக்கவில்லை, சௌம்யா. நம் வாழ்க்கைகள் வேறுமாதிரியாகி விட்டன... இது என் மனைவி கருணா.. இது சௌம்யா. சும்மா இல்லே கருணா, அஞ்சு வருஷம் சேர்ந்தே காலேஜிலே படிச்சோம்.''

''அதோடு இல்லே, கருணா. இப்போ அஞ்சு வருஷங்களுக்குப்புறம் இவரை — உங்க கணவரை — 'மீட்' பண்றதிலே எனக்கு ஒரு 'த்ரில்'லே ஏற்படுகிறது. நீங்க ரொம்ப அழகாக இருக்கிறீர்கள், கருணா! பரத் நன்றாகத்தான் செலக்ட் பண்ணி யிருக்கார்!''

அம்மன் சன்னிதியை விட்டு வெளியே வந்தோம். எனக்கும் சௌம்யாவுக்கும் நடுவில் அவர் வந்துகொண்டிருந்தார்....

வண்டி இண்டுக்கல்லைத் தாண்டி விட்டது. காலை வெய்யிலுக்குச் சூடுபிடித்துவிட்டது. 'சில்வர் ஜூபிலி தம்பதியர்' சற்றே ஓய்ந்தாற்போலிருந்தனர். காரணம் அந்த மனிதர் கொஞ்சம் உட்கார்ந்தபடி கண் அயர்ந்திருந்தார்.

கோயிலை விட்டு வெளியில் வந்ததும்—

''சௌம்யா! நாங்கள் ஸ்கூட்டரில் வந்திருக்கிறோம். உன் ஜாகை...'' என்று இழுத்தார் இவர்.

''நாங்கள் தங்கம் டாக்கீஸுக்குப் பக்கத்தில் குடியிருக்கிறோம்..'' என்றாள் சௌம்யா.

இவர் தம் கைப்பையிலிருந்து விசிட்டிங் கார்டை எடுத்து அவளிடம் கொடுத்தார்.

''கண்டிப்பாய் வா, சௌம்யா. உன் கணவரோடு கண்டிப்பாக வா.''

சௌம்யா அந்த விசிட்டிங் கார்டை ஒரு நோட்டம் விட்டுவிட்டு, ''நீங்க நல்ல வேலையிலே இருக்கீங்க, பரத். நான் யூனிவர்ஸிடியில் லெக்ச்சரராக இருக்கேன்... சரி, வரட்டுமா? கண்டிப்பாய் வீட்டுக்கு வருவேன், கருணா? நீ ஒரு அதிர்ஷ்டக்காரப் பெண்! உன் கணவர் ஓர் அப்பாவி. ரொம்ப நல்லவர்... வரட்டுமா?'' என்று கூறிவிட்டு நடந்து விட்டாள்.

இவர் ஏன் சில நிமிடங்கள் அவள் சென்ற திசையையே பார்த்துக் கொண்டு நின்றார்?

''சரி, கருணு! ஸ்கூட்டரில் ஏறு. புறப்படலாம்'' என்றார். கருணா என்ற என் பெயரைத் தம் மனசில் குஷியுணர்வு பிறக்கும்போதெல்லாம் கருணு என்று மாற்றி அழைப்பது எனக்குக் கொஞ்சம் பிடிக்கும். ஆனால் கடந்த பத்து நிமிஷ நேரத்துக்குள் எனக்கு அந்த வார்த்தை எரிச்சலையே உண்டாக்கி விட்டது.

அன்று இரவு.

இணைந்திருந்த இரு பெரிய கட்டில்களில் உடலும் உள்ளங்களும் இணைய வேண்டிய தானால்....

இயல்பாகப் பேச்சு சௌம்யாவுக்கு வந்தது. நான் கொஞ்சம் துடுக்காகவே பேசினேன்.

''காலேஜில் ஐந்தாறு வருஷம் படித்தவள்; ஒரு எம். ஏ. பட்டதாரி, லெக்சரர், கல்யாணமும் ஆகிவிட்டது. இன்னும் தனது மாஜி காதலர் எழுதிய கடிதங்களைப் 'பிரசர்வ்' செய்கிறாளாம். ஒண்டர்ஃபுல்!'' — நானும் சௌம்யாவின் அளவுக்குப் படித்தவள்தான் என்பதைச் சற்றே மறந்துவிட்டுப் பேசினேன்.

இவர் — அந்தச் சௌம்யாவின் கல்லூரி நண்பரான பரத் — சொன்னார்:

''அர்த்தமில்லாமல் பேசுகிறாய், கருணு. திருமணத்துக்கு முன்பு அநேகமாக இளைஞர்களுக்கும் குமரிகளுக்கும் ஏற்படக் கூடிய ஒரு விதமான 'ஃபான்ஸி' உணர்வுதான் அது. சிலர் விஷயத்தில் இது முற்றிக் கல்யாணமாகவோ அல்லது பல இன்னல்களிலோ முடியலாம். ஆனால் என் விஷயத்தில் அப்படி இல்லே. அவளும் எழுதினாள்; நானும் எழுதினேன்....'' என்று சொல்லிக் கொண்டே வந்தபோது அவர் கொஞ்சம் பெரிதாகவே சிரித்து, பிறகு தொடர்ந்தவராய்—

''ரொம்பப் பைத்தியக்காரத்தனம். முட்டாள்தனம். நான் ஒரு இலக்கியப் பித்தன், ஆங்கில இலக்கியத்தின் புராதன நாவலிருந்து சமீப கால இலக்கியம் வரையும் சர்வதா படித்துக் கொண்டிருப்பவன். இப்போதும் அப்படித்தான் என்பது உனக்குத் தெரியுமே, கருணு... அதனால் நான் படித்தவற்றின் விமரிசனமாக அவளுக்கு நான் எழுதிய கடிதங்கள் அமைந்து விட்டன...'' என்றார்.

''அதுதான் அந்த இலக்கியப் பொக்கிஷங்களை அவள் பாதுகாக்கிறாளோ?''

என் குரலிலிருந்த தீவிரத்தை அவர் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை.

''ஆமாம்! அதனால்தான் அவள் அவற்றைப் பாதுகாப்பதாகச் சொல்கிறாள். கருணு! அந்த சௌம்யா ஒரு குழந்தை. அவள் அந்தக் காலத்திலேயே என்ன சொன்னாள் தெரியுமா? 'பரத்! உன் கடிதங்களில் காதலைவிட இலக்கியத்தையே நான் அதிகமாகப் பார்க்கிறேன். ஒரு சுத்தமான, புதிய இலக்கியம் அது' என்பாள். அதனால்தான் கல்யாணத்துக்குப் பிறகும் அந்தக் கடிதங்களைப் பாதுகாப்பதாகச் சொல்கிறாள். இதிலிருந்தே உனக்குப் புரியவில்லையா கருணு? அது ஓர் இலக்கியப் பரிவுணர்வுதான். உலகம் நினைப்பதைப் போன்ற காதல் அல்ல. அதனால்தான் அது அதோடு முடிவு பெற்றது. எனக்கு நீ கிடைத்தாய்...''



மேட்டூர் கெமிகல் அண்டு இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்டின் விளம்பர இலாகாவைச் சேர்ந்த திரு எம். கே. ராஜகோபாலனின் குமாரத்தி சௌ. ரமாமணிக்கும், டெல்லி இன்ஸ்பெக்டரேட் ஆப் ஆர்மமெண்ட்ஸில் பணியாற்றும் சிரஞ்சீவி **எஸ். சீனிவாசனுக்கும்** திருமணம் ஜூன் மாதம் 7ந் தேதி மேட்டூர் 'கெமிகல் காலனி'யில் சிறப்பாக நடைபெற்றது.



**திருமதி ராஜம் பரமேஸ்வரன் - திரு பரமேஸ்வர ஐயர்**

ESSO-வில் சிறப்பாகப் பணியாற்றி, ஓய்வுபெற்ற திரு பரமேஸ்வர அய்யர் அவர்களது அறுபதாண்டு நிறைவு விழா கடந்த மே 3-ந் தேதி திருப்பதியில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அறுபதாண்டு நிறைந்த தம்பதிகளுக்கு நமது நல் வாழ்த்துக்கள்.

# மைக்ரோஃபைன்ட்
# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது–

சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அ வேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்ற

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோஃபைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி ஜலதோஷம் • ஃப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண் மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

நிகோலஸ் (N) தயாரிப்பு

A.G.57

அவர் முடிக்கவில்லை. சீறினேன் நான்:

''...ஆமாம். உங்களுக்கு நான் கிடைத்தேன். அவளுக்கு வேறு யாரோ கிடைத்தார். கோயிலில்தான் பார்த்தேனே. அதுவும் அம்பிகை சன்னிதானத்துக்கு எதிரில்.''

''கருணு!''

''ஏன் கத்த வேண்டும்? வெட்கமில்லாமல் சொல்லுகிருளே. அட்ரஸ் வேறே கொடுத்திருக்கிருள். தங்கம் டாக்கீக்குப் பக்கத்திலாம். நாளைக்கே போய்ப் பாருங்கள்...''

''கருணு, நீ அதிகமாகப் போகிருய்...''

''ஆமாம். உங்கள் அழகை அவள் புகழ்ந்தாள்; நீங்கள் அந்த மறந்துபோன நினைவுகளையெல்லாம்....''

''கருணு! ஒரு படித்த பெண் பேசுகிற பேச்சா இது? மறந்துபோன நினைவுகள் அல்ல அவை. மடிந்து போன நினைவுகள். எனக்குத் தூக்கம் வருகிறது...'' என்று சொல்லிவிட்டுப் புரண்டு படுத்துவிட்டார்.

எக்ஸ்பிரஸ் திருச்சி ஜங்ஷனுக்குள் நுழைந்து கொண்டிருந்தது.

வண்டி திருச்சியை விட்டுப் புறப்படுகிறது. என் நெஞ்சில் நேற்று மாலை நடந்த சம்பவம் விரிகிறது....

''கருணு! உனக்குப் பிடிச்ச அசல் காஷ்மீர் ஆப்பிள் வாங்கி வந்திருக்கிறேன். துண்டு பண்ணிக்கொண்டு வா. பார்ப்போம்.''

பெரிய குண்டான, கண்களை மயக்கும் படியான சிவப்பொளி வீசிய பழங்கள். இரண்டையும் கையில் வாங்கிக் கொண்ட நான் என்ன செய்தேன் தெரியுமா?

ஹாலில் மூலைக்கொன்ருகத் தூக்கி எறிந்தேன். ''உனக்கு மிகவும் கோபமா?'' என்று சாந்தமாகக் கேட்டார்!

நான் பேசவில்லை.

''காப்பி இல்லையா?''

வேகமாக உள்ளே சென்று பிளாஸ்கையும் ஓர் எவர்சில்வர் டம்ளரையும் கொண்டு வந்து மேஜையின்மேல் வைத்தேன்.

பிளாஸ்கைத் திறந்து டம்ளரில் காப்பியை ஊற்றி நிதானமாகக் குடித்துக் கொண்டே ''சௌம்யா மத்தியானம் டெலிபோன் செய்தாள்'' என்ருர்.

யார் கேட்டார்கள்?

''காலேஜ் அலுவலாக நாளைக்கு மெட்ராஸ் போகிருளாம். இரண்டு நாட்களில் வந்துவிடுவாளாம். வருகிற ஞாயிற்றுக்கிழமை தன் கணவரோடு அவள் நம் வீட்டுக்கு வருகிருளாம். உன்னிடம் சொல்லச் சொன்னுள்.''

காப்பியைக் குடித்து விட்டு ஹாலின் இரண்டு மூலைகளிலும் சிதறிக் கிடந்த அந்த இரண்டு ஆப்பிள்களையும் எடுத்து வந்து மேஜையின் மேல் வைத்தார்.

''கருணு! புதிய படம் வர்றயா?''

''உங்கள் சௌம்யா தான் இன்னும் ரெண்டு நாளில் திரும்பி வந்து விடுவாளே! அவளை அழைத்துக் கொண்டு போங்கள். அவளை இன்று நேற்ரு. கல்யாணமாவதற்கு முன்பே இருந்து பழக்கம்தானே?''

பொறுக்க முடியாமல், ''கருணு'' என்று கத்திஞர் அவர். அப்படி அவர் கத்தி அது வரை நான் பார்த்ததில்லை; கேட்டதில்லை.

''நீ என்ன பேசறே, கருணு? அவள் திருமணமான ஒரு குடும்பப் பெண்...''

''தெரியுமே?''

''மறுபடியும் மறுபடியும் அலட்சியமாகப் பேசுகிருய். இனி என்னுல் பொறுக்க முடியாது. நான் உளறிக் கொட்டியிருந்த இலக்கியப் பிதற்றல்களை அவள் நட்புணர்வால் பத்திரப்படுத்தியிருக்கிருள். அவ்வளவுதான். இதை அவள் கணவர் படித்திருக்கலாம், படித்திராமலும் இருக்கலாம். ஆனுல் அவள் மகிழ்ச்சியாகக் குடும்பம் நடத்துவதாகத் தெரிகிறது. நாமும் மகிழ்ச்சியாக இருக்கிறேம்... இம்மாதிரி உணர்ச்சிகளை வெறும் காலைப் பனி என்று ஒதுக்கிவிடு, கருணு!''

அவர் சொல்லச் சொல்ல என்னுள் ஏதோ வெறி ஏறிக்கொண்டேதான் வந்தது.

''நான் தீர்மானித்து விட்டேன். நாளைக் காலை எக்ஸ்பிரசில் மெட்ராஸ் புறப்படுகிறேன். என் அப்பாவிடம் கேட்கப் போகிறேன்....''

''என்ன சொல்றே கருணு?''

''பெரிய பாங்க் ஏஜெண்ட், ரொம்பப் பெரிய பட்டமெல்லாம் வாங்கியவர், தங்கமாய்க் கொடுத்து, வைரத்தை விலைக்கு வாங்கியதாக நினைத்தீர்களே அப்பா, அவர் ஒரு கண்ணுடிமணிதான் என்று சொல்லப் போகிறேன்.....''

''கருணு. இதுதான் உன் தீர்மானமா?''

''ஆமாம்.''

ரயில் விருத்தாசலத்தைத் தாண்டிக் கொண்டிருந்தது. சில்வர் ஜுபிலி தம்பதி என்னை வலுக்கட்டாயப்படுத்தி அன்புடன் கொடுத்த சித்ரான்னங்களைச் சாப்பிட்டேன்.

வயிறு நிரம்பிக் கொண்டிருந்தபோது உள்ளத்தில் சற்றே சாந்தம் சூழவே நினைவுகள்

**ரேகா** அனந்த் பாய் — ராம் வாயிர்கர்












கனிய ஆரம்பித்தன. அவர் எங்கு சாப்பிட்டிருப்பார்? மதுரையில் இல்லாத ஓட்டலா? வாரத்துக்கு ஒரு நாள் சமைக்கக் கூடாது என்று வலுக்கட்டாயமாக ஓட்டலுக்கு இழுத்துக்கொண்டு போகிறவர் ஆயிற்றே. ஆயினும் 'சாப்பிட்டிருப்பாரோ' என்ற எண்ணம் ஏன் என்னிடம் உண்டாக வேண்டும்?

அம்புஜ அம்மாள் டிபன் காரியர் பாத்திரங்களைக் கழுவி வர 'பேசின்' பக்கம் சென்றிருந்தபோது அவர் சொன்னார்:

''அவ ஒரு குழந்தை அம்மா. என்னோட அப்பப்போ சண்டை பிடிக்கிறாளேன்னு நினைக்காதே. அவ மனசிலே ஒண்ணுமே கிடையாது. அது மாதிரி என் மனசிலும் ஒண்ணுமே கிடையாதுன்னு அவளுக்குத் தெரியும். எங்க ரெண்டு பேர் மனசிலேயும் இருக்கிற இரகசியம் இதுதான். இப்படியே இருபத்தைஞ்சு வருஷம் ஓட்டிட்டோம். இவ தம்பியைத்தான் குழந்தையா எடுத்து வளர்த்தோம். அந்தப் பயலுக்குப் போன வருஷம் கல்யாணம் செஞ்சு வைச்சோம். மீனாட்சின்னு பேரு. ரொம்ப நல்ல பொண்ணு. இரண்டு பேரும் ஒருத்தரையொருத்தர் கத்திண்டு... சந்தோஷமாத்தான் இருக்கா. மதுரையிலேதான் இருக்கா. எங்களை வழியனுப்பக்கூட வரலேன்னு எத்தனை சந்தோஷமா இருக்கணும்னு பார்த்துக்கோ...''

'என்ன! இவர்களுக்குக் குழந்தையே இல்லையா?' இப்படி நான் நினைத்துக் கொண்டேயிருந்தபோது அம்புஜ அம்மாள் வந்து கொண்டே, ''பிரதாபத்தையெல்லாம் கொட்டி அளக்கிறாரோ? குழந்தை இல்லாட்டா என்னடியம்மா? இவரே எனக்கு ஒரு குழந்தை! இருபத்தி அஞ்சு வருஷமா இதைச் சீராட்டறேன்!'' என்றாள்.

இருவரும் சேர்ந்து சிரிக்க அந்தச் சிரிப்பில் நானும் கலந்து கொண்டேன்.

விழுப்புரத்தை நெருங்கிக் கொண்டிருந்தது ரயில்; என் நெஞ்சில் தாலாட்டு. 'அவர் என்னதான் குற்றம் செய்து விட்டார், நான் இப்படிப் பறந்தடித்துக் கொண்டு பட்டணத்துக்குப் பிறந்தகம் நோக்கிப் புறப்படுவதற்கு?'

மாலையின் இதமான தென்றல் வீசிக் கொண்டிருந்தபோது எழும்பூர் ரயில் நிலையத்துள் சென்று நின்றது எக்ஸ்பிரஸ். வெள்ளி விழாத் தம்பதியிடம் நான் விடைபெற்றபோது, ''நீயும் எங்களை மாதிரி சில்வர் ஜூபிலி கொண்டாட வேண்டும் அம்மா'' என்றார் அந்த காண்ட்ராக்டர்–கம்–என்ஜினியர். அம்புஜ அம்மாளோ, ''ஷேரேண்மையம்மா. இனிமேல் 'துணை'யோடு வர மறக்காதே'' என்றாள்.

துணை!

'நான் புறப்படப் போகிறேன்' என்று வைராக்கியத்துடன் சொல்லிக்கொண்டு புறப்பட்டு விட்டாலும் அன்று முழுதும் அந்தப் பகல் நேர எக்ஸ்பிரசில் எனது 'துணை'யின் நினைவுகளைத் தாங்கித்தானே வந்தேன்?

கைப் பெட்டியுடன் இறங்கினேன்.

பிளாட்பாரத்திலிருந்து குரல்: ''ஹலோ, கருணா!''

சௌம்யா நின்று கொண்டிருந்தாள். நேற்று, 'சௌம்யா நாளை மெட்ராசுக்குப் போகிறாள்' என்று அவர் சொன்னாரே, அதன்படி சௌம்யாவும் இந்த வண்டியிலேயே வந்திருக்கிறாளா?

''கருணா! இவர் என் கணவர். நான் தனியாகப் பிரயாணம் பண்ணக் கூடாது என்று, மதுரை கார்ப்பரேஷனில் ஒரு பொறுப்பான உத்தியோகம் பார்ப்பவர், இரண்டு நாட்கள் லீவு போட்டுவிட்டுப் பிடிவாதமாக எனக்குத் 'துணை'யாக வந்திருக்கிறார்...'' என்று கூறிவிட்டுக் கணவரை நோக்கித் திரும்பினாள்.

''இது கருணா. மிஸஸ் கருணா பரத்வாஜன். நேற்று நான் சொன்னேனே'' என்றாள்.

''வணக்கம், மிஸஸ் பாரத்வாஜன். சௌக்கியம்தானே? சௌம்யா தன் காலேஜ்மேட் 'பரத்'தைப் பற்றி ஏற்கனவே எனக்குச் சொல்லியிருக்கிறாள். பரத் அந்தக் காலத்தில் எழுதிய கடிதங்களைப் பற்றி உங்கள் எதிரிலேயே நேற்று சௌம்யா சொன்னாளாம். அது ரொம்பத் தப்பு. என்ன இருந்தாலும் ஓர் இளம் பெண்ணுள நீங்கள் எப்படி நினைத்தீர்களோ?... மிஸஸ் கருணா! அதெல்லாம் வெறும் தொடுவானம் மாதிரி. அழகாகத் தெரிகிற மாதிரி இருக்கும்; ஆனால் ஒன்றுமே இருக்காது. நீங்கள் தப்பாக எண்ணவில்லையே?''

சௌம்யாவின் கணவர் அப்படிச் சொன்னதும் நிலைகுலைந்துவிட்டேன் நான். சௌம்யாவுக்கு, அவள் கணவருக்கு, என்னுடைய 'அவருக்கு'ப் புரிந்த விஷயம் எனக்குப் புரிய மறுத்துவிட்டது ஏன்?

எனக்குள் குமுறிய உணர்ச்சிகளை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டவளாக—

''நான் கொஞ்சம் முன்னால் செல்லவேண்டும், சௌம்யா! வருகிற ஞாயிற்றுக் கிழமை அவசியம் உங்களை மதுரையில் எங்கள் வீட்டில் எதிர்பார்க்கிறேன். என் கணவர் நேற்றிரவே என்னிடம் சொல்லி விட்டார்'' என்றேன்.

ஸ்டேஷனுக்கு வெளியே செல்லவில்லை நேரே டிக்கெட் கௌண்டருக்குப் போய் அன்றிரவே மதுரைக்கு ஓர் எக்ஸ்பிரஸ் ஸ்லீப்பர் பர்த் டிக்கெட் வாங்கிக்கொண்டேன்.

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 பிப்ரவரி, 18உ**

**ச**னிக்கிழமை. உண்ணுவிரதத்துக்குப் பின் காந்தியடிகளுடைய விஷயமாக யாதொரு சேதியும் வரவில்லை. சிறையிலிருந்து விடுதலை பெற்றதும் தோழர்கள் இல்லாமல் தனியாகவே வேலை செய்ய வேண்டியிருக்குமே என்ற பயத்துடன், இப்போது தோல்வியாலும் வேலையின்மையாலும் ஏற்படும் மனச் சோர்வும் சேர்ந்து கொள்ளும் போலிருக்கிறது. நம்மைச் சூழ்ந்து நிற்கும் இருளை ஓட்டக்கூடிய ஒளி எதுவும் தோன்றுவதாக இல்லை. ஒத்துழையாமைக்காரர்கள் செய்த இவ்வளவு தியாகங்களின் பலனுக ஏதோ ஒன்றிரண்டு சீர்திருத்தங்கள் மட்டுமேதான் பெறப் போகிறோமோ? இந்தச் சீர்திருத்தங்களைப் பெற இத்துணைத் தியாகங்கள் தேவையில்லை. சட்ட வரம்புக்குட்பட்ட பழைய முறையில் ஒழுங்காக இடைவிடாமல் உழைத்தால் போதும். இவைகளை எளிதில் பெற்றுவிடலாம்.

'பெரும் அரசியல் பலன்கள் பெறாவிட்டாலும் நாம் ஆத்ம சுத்தமும் ஆற்றலும் பெற்றுவிட்டோமல்லவா?' என்று கேட்கக் கூடும். உண்மைதான். சந்தேகமில்லை. ஆயினும் இதைக் கூறி நம்முடைய மனத்தைச் சமாதானப்படுத்த முடியாது. அத்துடன் இதற்காக ஏற்பட்ட தியாகங்கள் மிகவும் அதிகமானவை என்றே கூற வேண்டும். இவ்வளவு பெரிய இயக்கம் நடத்திவிட்டு இறுதியில் ஏதோ சில சீர்திருத்தங்கள் மட்டுமே பெறுவது என்பதை என் மனமானது ஏற்றுக் கொள்ளமாட்டேன் என்கிறது. அதைச் சமாதானப்படுத்த அதிக நாட்கள் செல்லும்போல் தோன்றுகிறது. ஆயினும் நான் யாரையும் குற்றம் சொல்ல வில்லை. ஒரே மூச்சில் வெற்றி காண்பதற்கு வேண்டிய ஆற்றல் தேசத்தில் காணப்படவில்லை. அவ்வளவு தூரம் ஜனங்கள் பொருள் வறுமையால் வாடி வதங்கி விட்டார்கள். அதனுல் பலமுறை போர் நடத்திய பின்னர்தான் வெற்றி காண முடியும் என்று எண்ணுகிறேன்.

ஆந்திர நண்பர்கள் மறுபடியும் தங்கள் குறைகளை என்னிடம் வந்து கூறிக் கொண்டிருக்கிறார்கள். சிறைத் தலைமை அதிகாரி ஒப்பந்தப்படி நடக்க வில்லை என்று முறையிடுகிறார்கள். தனியாகச் சமைத்துக் கொள்வதற்கு இடம் தரவில்லை என்பதும், கடுங் காவல் கைதிகளுக்குத் தினந்தோறும் குளிக்க அனுமதி தரப்படவில்லை என்பதுமே முக்கியமான குறைகள். அவர்கள் கறியை மட்டும்தான் தாங்களே சமைத்துக் கொள்ள விரும்புகிறார்கள். ஆனுல் சிறை அதிகாரிகள், ''அப்படியானுல் சமையல் முழுவதையும் நீங்களே செய்ய வேண்டும்'' என்று கூறுகிறார்கள். அப்படிச் சமையல் முழுவதையும் செய்வதானுல் அது மிகவும் கஷ்டமான காரியம். அவர்களைப் பயமுறுத்துவதற்காகவே அப்படி அதிகாரிகள் கூறுகிறார்கள் என்று தோன்றுகிறது. சமையல் விஷயத்திலும் சாமான்கள் தரும் விஷயத்திலும் எவ்வித மாறுதலும் செய்ய விரும்பவில்லை



சிறை அதிகாரிகள். இதைத்தான் திரு சௌத்ரி கூறுகிறார். அப்படித்தான் என்று நானும் எண்ணுகிறேன். இந்த விஷயத்தில் நான் எப்படித் தலையிடுவது? என்ன உதவி செய்ய முடியும்? எனக்கு விளங்கவில்லை. நியாயமாகப் பார்த்தால், அதிகாரிகள் எந்த எண்ணத்துடன் கூறிய போதிலும் சமையல் முழுவதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்; இல்லையானுல் முழுவதையும் அதிகாரிகளிடமே விட்டுவிட வேண்டும் என்றே தோன்றுகிறது.

சிறை நிர்வாகத்தின் மாகாணத் தலைமை அதிகாரி வரப் போகிறாராம். அதற்காக வெள்ளை அடிக்கிறார்கள். சுவரை மட்டுமன்று; எல்லா விஷயங்களையும்தான்!

# குழந்தை ரத்னவாக மாறிய கோபரத்னு!

## எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட்

எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட் 'எலெக்டட்' பிரசிடெண்ட் இல்லை. 'செலக்டட்' பிரசிடெண்ட்! ஆம்! அவர் பிள்ளையைத் திருமணம் செய்து கொண்டதன் மூலம் அவரை என் மாமனாராக, 'செலக்ட்' செய்தேன். இப்போது என் மாமனார் திருவாளர் ஜகதீசன் அவர்கள் தான் எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட்.

ஒரு காலத்தில் அவர் 'கோபரத்னு'வாக இருந்தவர் தானும். கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இப்போது அவர் ஒரு 'குழந்தை ரத்னு' தான். என் குழந்தைகளுக்கு அவர் செல்லம் அதிகம். குறிப்பாக என் பையனுக்கு அவரிடம் சலுகைகள் அதி



கம். அவனை நாங்கள் கண்டிக்கக் கூடாது என்று அவர் ஒரு சட்டத்தையே பிரகடனப்படுத்தியிருக்கிறார்.

சில வருஷங்களுக்குமுன் அவர் தேவி கருமாரியம்மன் கோயிலில் ஏதோ குறி கேட்கப் போனாராம். 'உனக்கென்ன கவலை? உன் வீட்டிலேயே முருகன் வரப் போகிறான், போ!' என்று குறி சொல்பவர் சொல்லியிருக்கிறார். அதைத் தொடர்ந்து சில நாட்களில் எனக்கு ஒரு பிள்ளை பிறந்தது. எங்கள் வீட்டுப் பிரசிடெண்டைப் பொறுத்தவரையில் அவன் அவருக்கு முருகன். அதியாயச் செல்லம்!

சில சமயங்களில் அவரே குழந்தையாகி விடுவதும் உண்டு. ஆரணிக்குப் பக்கத்தில் உறவினர் வீட்டுக் கல்யாணம். முக்கியமான கல்யாணம். ஆனால் வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்ப முடியாத நிலை. நங்கைநல்லூரில் ஒதுங்கிய பகுதியிலுள்ள வீடாகையால், இரவில் யாராவது காவலாக இருந்து தான் தீர வேண்டும். முதலில் என் மாமனார் தான் கல்யாணத்துக்கு வரவில்லை என்று சொல்லி விட்டார். வீட்டுக் காவல் பிரச்னையும் தீர்ந்தது. நான், என் குழந்தைகள், மாமியார், கணவர் எல்லோரும் மூட்டை முடிச்சுக்களுடன் கிளம்பினோம்.

சாமான்களுடன் வாசற்படிக்கு வந்துவிட்டோம். அப்போது திடீரென்று என் மாமனார், ''என்னை மாத்திரம் விட்டுவிட்டு நீங்களெல்லாம் கிளம்பி விட்டால் என்ன அர்த்தம்?'' என்று ரொம்ப சீரியஸாக ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார். என் மாமியார் ரொம்ப அப்பாவி. வெலவெலத்துப் போனான். எல்லா ஏற்பாடுகளும் ஆன பிறகு இப்படி ஒரு கேள்வி அவரிடமிருந்து வரும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அவருக்குப் பதில் சொல்ல ஆரம்பித்தால் நிலைமை மோசமாகிவிடும் என்று தெரியும். அதனால், வாயைத் திறக்காமல், கரகரவென்று குழந்தைகளையும் மாமியாரையும் இழுத்துக் கொண்டு பஸ் ஸ்டாப்பை நோக்கிக் கிளம்பிவிட்டேன்.

அந்தப் பிரயாணத்தில் ஆரணி, படவேடு, வேலூர், ரத்தினகிரி எல்லாம் போய் விட்டுத் திரும்பினோம். நாங்கள் திரும்பி வந்து வீட்டில் நுழைந்ததும், அவர், தயாராக எங்கோ கிளம்ப முனைந்திருந்தார். ''நீங்கள் எல்லோருமாக இப்போது போய் வந்த ஊர்களுக்கெல்லாம் நான் போய் வரப் போகிறேன்'' என்று சொல்லி விட்டுக் கிளம்பினார். அப்படியே நினைத்ததை நடத்தி விட்டுத்தான் திரும்பினார். அப்படி ஒரு குழந்தைத்தனமான பிடிவாதம்.

வீட்டில் அவரை யாரும் எதிர்த்து அபிப்பிராயம் சொல்வதை விரும்பமாட்டார். அப்படி ஏதும் நிகழ்ந்து விட்டால் இரண்டு நாட்கள் யாரிடமும் பேசாமல் கழித்துவிடுவார்.

குடும்பத்தில் சிக்கனத்தைக் கையாள வேண்டும் என்று எப்போதும் வற்புறுத்துவார். அவர் குஷியாக இருக்கிறார் என்பதை நான் தெரிந்து கொள்ளும் விதமே 'அலாதி'. என்றைக்காவது அலுவலகத்திலிருந்து நான் திரும்பும் நேரத்தில் டிபனுக்கு எதிர் பாராமல் 'ஸ்வீட்டுகள்' தயாராக இருக்கும். எங்கள் பிரசிடெண்டே தயாரித்திருப்பார். அந்த வித்தையும் அவருக்கு நன்றாகத் தெரியும். சற்றுக் கண் பார்வைக் குறைவால் என் மாமியாரை நான் அடுப்படிக்கு அனுமதிப்பதில்லை. இதை அவர் பயன்படுத்திக் கொள்வார்.

மிலிட்டரி சர்வீஸில் இருந்தவர் அவர். அதிலிருந்து விடுபட்டு வந்த பிறகு சில நாட்கள் வியாபாரத் துறையில் அக்கறை காட்டினார். அதையும் இழுத்துமூடிவிட்டு இப்போது பேரன் பேத்திகளை மேய்த்துக் கட்டும் 'சர்வீஸி'ல் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறார்.

சில நாட்களுக்கு முன்னால் ஒரு நாள் முன்னிரவு நேரம். என் மாமியார் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். திண்ணைக்கு அடுத்த வெளி வாசலில் போடப்பட்டிருந்த கட்டிலில் என் பையன் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். நான் சமையல் அறையில் ஏதோ வேலையாயிருந்தேன்.

என் மாமனார் உள்ளிருந்து வாசல் பக்கம் வந்



திருக்கிறார். அப்போதுதான் அவர் பார்வையில் நல்ல பாம்பு விழுந்திருக்கிறது. பெரிய பாம்பு. வாசல் கேட்டுக்குப் பக்கத்தில் படமெடுத்துப் படுத்துக் கிடந்திருக்கிறது. அவருக்கு ஒரே திகைப்பு. அவர் இரைந்து உதவிக்கு யாரையாவது கூப்பிட்டால், பாம்பு கட்டில் பக்கம் வந்துவிடுமோ என்ற பீதி. அவருக்கு என்ன தோன்றியதோ தெரியாது! 'முருகா! முருகா!' என்று கூவிக் கொண்டு நின்றிருந்த அந்த இடத்திலேயே நெடுஞ்சாண் கிடையாக விழுந்துவிட்டார்.

அந்தக் கணத்தில் காம்பவுண்டுச் சுவர் ஓரத்தில் பெருச்சாளி ஒன்று ஓடியிருக்கிறது. பொதுவாகப் பெருச்சாளி அந்த நேரத்தில் தட்டுப்படாது. நள்ளிரவுக்கு மேல்தான் சத்தம் கேட்கும்.

பெருச்சாளி சத்தத்தைக் கேட்டதும் அந்த நல்ல பாம்பு அதை நோக்கி எதிர்ச் சுவர் ஓரமாக வேகமாக நகர்ந்தது. பெருச்சாளி முன்னுகவும் பாம்பு பின்னுலேயும் கேட் வழியாக வெளியே ஓடித் தெருவைத் தாண்டி எங்கோ மறைந்துவிட்டன. அவை சண்டை போடவும் இல்லை. சீறவும் இல்லை!

அப்புறம்தான் என் மாமனார் எழுந்திருந்திருக்கிறார். இந்த நிகழ்ச்சி மகத்தான தெய்வாம்சம் நிறைந்தது என்று அவர் நினைக்கிறார். இல்லாத போனால் அந்த நல்ல பாம்பை அந்த நல்ல நேரத்தில் வெளியே அழைத்துப் போக, பெருச்சாளி, வழக்கமில்லாத வழக்கமாக வருவானேன்?

நங்கைநல்லூரில் நாங்கள் வீடு கட்ட ஆரம்பித்த நேரம். அந்த இடம் ஊரை விட்டுத் தள்ளியிருந்தது. செங்கல், மரம் முதலியவற்றுக்குக் காவல் அவசியம். என் மாமனார் அந்த இடத்துக்குப் பக்கத்தில் ஆசிரமம் மாதிரி ஒரு குடிசை போட்டுக் கொண்டு தனியாக இரவு நேரங்களை அங்கேயே காவலாகக் கழித்துக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் இரவு இரண்டு மூன்று முரடர்கள் திருடும் நோக்கத்துடன் வந்திருக்கிறார்கள். இவரை மிரட்டியிருக்கிறார்கள். "அது யாரு வீடோ! பூர்த்தியாகி யிருக்கும் அறையின் சாவி என்னிடம் இல்லை. நான் சும்மா காவலுக்காக இங்கே படுத்திருக்கிறேன்......" என்று பக்குவமாக இதமாகச் சொல்லி அவர்களைச் சமாளித்து அனுப்பினார். அந்த அறையில் நாங்கள் நிறையச் சாமான்களைப் போட்டுவைத்திருந்தோம்! அவருடைய சமயோசிதத்தால் அவை தப்பின.

தோட்டக் கலையில் என் மாமனாருக்கு ஈடுபாடு அதிகம். அநாவசியமாக அழகுப் பூச்செடிகளுக்கெல்லாம் அவர் இடம் கொடுக்க மாட்டார். உபயோகமான காய்கறிகளுக்குத்தான் இடம். தண்ணீர் பாய்ச்சுவதும் அவர் பொறுப்புத்தான். அவர் பின்னை, செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றினால்கூட அவருக்குத் திருப்தி இருக்காது.

தோட்டத்துக்கு இணையாக அவருடைய அன்பைப் பகிர்ந்து கொள்வது வீட்டில் உள்ள மாடு. அதற்கு ஓர் அபிட்டமும் குறைந்துவிடக் கூடாது. குடும்பத்தில் ஒரு நபராகக் கருதி அதைக் கவனிக்க வேண்டும் என்று வற்புறுத்துவார்.

வீட்டின் மீது அவர் எடுத்துக் கொள்ளும் அக்கறையோ சொல்லி முடியாது. வீட்டுச் சுவரில் ஓரிடத்திலும் ஆணி அடிக்கக் கூடாது. 'ஸ்டாண்டிங் ஆர்டர்'. போனால் போகிறது என்று பூஜை அறையில் சுவாமி படங்கள் மாட்ட வசதி செய்து கொடுத்திருக்கிறார்.

மிலிட்டரிக்குப் போயிருக்கிறவர் என்பதினால், அவர் தாயார் இறந்து போன போது அவரை ஏதோ சில சடங்குகளில் 'கலந்து கொள்ளாமல் செய்தார்களாம் அவருடைய உறவினர்களில்சிலர்! "அப்படியா சமாசாரம்!... உங்கள் உறவே எனக்கு வேண்டாம்" என்று உதறித் தள்ளினவர்தான்! இன்றும் அந்த வைராக்கியம் உண்டு.

'குமரன் குடில்' என்று எங்கள் வீட்டுக்குப் பெயரைத் தேர்ந்தெடுத்தவரே அவர்தான். அதற்குப் பொருத்தமாக எங்கள் காலனியின் பெயரே 'செந்தூரான் காலனி!'

அவர் பெயரைச் சொல்லிக் கேட்டால் பலருக்கு எங்கள் வீட்டைக் காண்பிக்கத் தெரியாது. தாடிக்காரர் வீடு என்றால் சின்னக் குழந்தைகூடக் காண்பித்து விடும்!

**கோமதி ஸ்வாமிநாதன்**

---

பிரஸிடென்ட்:

**திரு சி. எஸ். ஜகதீசன்**

பேட்டி அளித்தவர்:

மேற்படியாரின் மருமகள்

**ஸ்ரீமதி அபீதா**

---



**ப**ச்சை விளக்கு விழுந்ததும் டாக்ஸி ஒரு குலுக்கலுடன் கிளம்பியது. தன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த நளினியைத் திரும்பிப் பார்த்தாள் உஷா. நளினி சலனமற்றுத் தெருவையும், ஓடும் கார்களையும், பஸ்களையும் பார்த்துக் கொண்டிருந்தாள். உஷா பின் பக்கம் திரும்பிப் பார்த்தாள். டாக்ஸிக்குப் பின்னால் காரும் பஸ்ஸுமாக ஒரு பெரிய வரிசையே தொடர்ந்தது. உஷா மெல்லச் சிரித்தாள்.

'வாழ்க்கையும் இப்படித்தானோ? பச்சை விளக்கு எரிந்ததும் எல்லா வண்டிகளும் நாம் வரும் டாக்ஸிக்குப் பின்னால் தடையில்லாமல் வருவது போல....'

எதையோ ஒத்திட்டுப் பார்க்க அவள் முயற்சி செய்தாள். ஆனால் அதைவிட வேறு ஒரு பெரிய சிந்தனை அவளை அழுத்தத் தொடங்கியது.

நளினி 'ஊருக்கு வரப் போகிறேன்' என்று எழுதியவுடன் அவளுக்குப் பலவாறாக நினைக்கத் தோன்றியது.

'ஒன்று அவள் கணவருடன் வரவேண்டும். அல்லது அவள் தாயாகும் பேற்றைப் பெற்றிருக்க வேண்டும்!'

இந்த இரு எண்ணங்களையும் தவிர அவளால் வேறு மாதிரி கருத முடியவில்லை. ஆனால் ரயிலடியில் அவளை மட்டும் தனித்துப் பார்த்ததும் நெஞ்சம் பகீரென்றது உஷாவுக்கு.

''என்ன நளினி, அவர் வரவில்லையா?''

''வரவில்லை; நான் வந்திருக்கிறேனே அது போதாதா? நான் ஒரு 'பொருட்டாக' உனக்குத் தோன்றவில்லையா?''

பதில் கூற வேண்டும் என்று நினைத்தாள் உஷா. ஆனால் சொல்லவில்லை.

நளினி இன்னும் வெளியிலேயே பார்த்துக் கொண்டிருந்தாள். உஷாவும் திரும்பிப் பார்க்கத் தொடங்கி விட்டாள்.

அவளுக்கு நன்றாகப் புரிந்து விட்டது. தான் கோட்டை கட்டியபடியெல்லாம் நளினி வரவில்லை. ஒருவேளை அதைத் தகர்த்தெறியவும் வந்து விட்டாளோ?

**அ**ந்தத் தெருவில் யாருமே சொல்வார்கள், உஷா ஒரு ஜீவனுள்ள பெண் அல்ல என்பதை! அவளை ஒரு மரக்கட்டை என்றே சிலரும் கூறுவார்கள். ஆனால் அவளைக் கேட்டாலோ 'லட்சியம்', 'கடமை' என்று ஒரு சில பெரிய வார்த்தைகளைச் சொல்லி நிறுத்திக்கொண்டு விடுவாள்.

உஷாவைப் பொறுத்த அளவில், அவள் வீட்டுக்கு மூத்தவள் மட்டுமில்லை, அவள்தான் தாய், தந்தை, அண்ணன், மற்றும் உதவிக்கு ஓடோடி வரக்கூடிய உறவுக்காரர்களின் மொத்த உரு. தனக்குக் கிடைத்த சம்பளத்தில் பணம் சேர்த்துத் தனக்குக் கல்யாணம் செய்து கொள்ளாது, தன் தங்கை நளினியின் திருமணத்தை முன்னின்று அவள் விமரிசையாக நடத்தியபோது ஊரே அதிசயித்தது உண்டு. ஆனால் அந்த ஊர், தங்கையைத் தனியே அழைத்து வரும்போது என்ன நினைக்கப் போகிறதோ?

''**நா**ன் இனி அங்கே போவதாக இல்லை!'' என்றாள் நளினி.

இந்தக் குண்டு தலையில் விழுமோ என்று எதிர்பார்த்தவாறே இருந்ததால் உஷாவுக்கு இது பயத்தையோ ஆச்சரியத்தையோ தரவில்லை. ''காரணம்?''

''கன்னி கழிந்தால் போதும் என்று என்னைக் கதி இல்லாமல் என் அக்கா அங்கே கொடுக்கவில்லை. எனக்கும் கரளை இருக்கு!''

''விவரமாகச் சொன்னால் நல்லது...''

''விவரமாகச் சொல்ல என்ன இருக்கிறது? வார்த்தைக்கு வார்த்தை நம்மை மட்டப்படுத்துவதும், சமையற்காரிக்கும் கேவலமாக என்னை நடத்துவதும் எனக்குத் துளியும் பிடிக்கவில்லை. என்னை ஒரு மாசம் என் அக்கா வீட்டுக்குக் கொண்டு போய் விடும்படி நீர்த்துக் கேட்டு விட்டேன். 'நீயே ரயில் ஏறிப் போய்க்கொள்' என்று கூறி விட்டனர்....''

''நீயும் ஏறி வந்து விட்டாயாக்கும்?''

''அதான் நிற்கிறேனே, தெரியவில்லை? ஏறி வரவில்லை என்றால் இங்கே எப்படி வந்து நிற்க முடியும்?''



சிரிப்பை அடக்கப் பார்த்தாள் நளினி.

''சிரிக்காதே... எனக்கு வயிற்றை என்னவோ செய்கிறது!''

**உ**ஷாவுக்கு வயிற்றை மட்டுமல்ல, உடல் முழுவதுமே வேதனை செய்தது. எந்த ஆசை, தன் மனத்துக்குள் புகக் கூடாது என்று பெரிய பூட்டைப் பூட்டிப் பாதுகாத்து வந்தாளோ, அந்த ஆசை விபரீதமாக நுழைந்து விட்ட இந்த நேரத்தில் திடீரென்று நளினி தன்னுடைய குணத்தைக் காட்டி விட்டாளே என்று அவள் நினைத்தபோது, துக்கம் தொண்டையை அடைத்தது. கல்யாணத்தைத் தான் செய்து கொள்ளாமல், தான் உழைத்துச் சம்பாதித்துத் தங்கைக்குச் செய்து வைத்தபோது அவள் 'லட்சியம்' 'கடமை' என்றெல்லாம் சொல்வாளே தவிர, 'தியாகம்' என்ற பெரிய வார்த்தையை மனத்தாலும் நினைத்ததில்லை. இன்னும் சொல்லப் போனால் திருமண ஆசை என்ற சபலமே அந்தப் பெண்மையின் நெஞ்சில் நுழையாத நேரம் அது. வாழ்நாள் முழுதுமே, கிழவியானாலும், குமாரி உஷாவாகவே இருக்கப் போகிறோம் என்று நினைத்திருந்த அவளுக்குச் சுந்தரின் சந்திப்பு ஒரு மாற்றத்தைக் கொடுத்தது.

சுந்தர் அப்படி யொன்றும் வாலிப முறுக்கேறிய காளை என்று கூறமுடியாது. அவருக்கும் வயது தாராளமாக நாற்பது இருக்கலாம். குழந்தைகள்கூட இரண்டு அவர் ஏற்றுக் கொண்ட வாழ்க்கைச் சுமையின் கூலிகளாக நின்றன. அவருடைய மனைவி சுதா குழந்தைகளோடு அவரையும் அனாதையாக்கி விட்டுப் போன பிறகு அவர் தனியாய்த் தவித்தார். அவருக்குப் பல இடங்களில் பெண் தருவதற்கு முன்வந்தனர். ஆனால் சுந்தரோ ஒரேயடியாக மறுத்து விட்டார்.

தம்மோடு அலுவலகத்தில் பணி புரியும் உஷா மீது அவருக்கு எப்போதுமே ஒரு மரியாதை. அநுதாபமும்கூட. அந்தப் பெண்மை வீணாவதை அவர் பலமுறை நினைத்து வருந்தியதும் உண்டு. 'உஷாவின் திருமணத்துக்குத் தடைக் கல்லாய் இருந்தது நளினி. அவளுக்குத்தான் கல்யாணமாகி விட்டதே! உஷா சம்மதித்தால்....?'

தமது உயிர் நண்பர் மூலம் இதை அவர் அவளிடம் கூறியபோது உஷாவுக்கு என்னவோ போல் இருந்தது. பலமுறை சிந்தனை செய்து அவள் முடிவுக்கு வந்தாள். ஆனால்...

**ந**ளினி தன் பெட்டியைத் திறந்து எதையோ தேடிக் கொண்டிருந்தாள்.

''என்ன பார்க்கிறே நளினி?'' என்றவாறே அவளருகே வந்தாள் உஷா.

''ஒன்றுமில்லே... எனக்கு நீ வாங்கித் தந்த நெக்லஸ்...!'' தூக்கிவாரிப் போட்டது அவளுக்கு. நெக்லஸ் பெட்டியில் நெக்லஸைக் காணவில்லை. அதற்குப் பதிலாக அதில் அவளும் அவள் கணவரும் சேர்ந்து எடுத்துக் கொண்ட படம் ஒன்று இருந்தது.

''நெக்லஸைக் காணோம் உஷா!''

''போட்டோ எப்படி வந்தது? அவருக்குத் தெரியாமல் எடுத்து வந்து விட்டாயா?''

''இல்லே, இல்லே... அவர்தான் என் நெக்லஸை எடுத்துக் கொண்டு பதிலாகப் போட்டோவை வைத்திருக்க வேண்டும்...''

''இப்போதாவது தெரிந்துகொள் நளினி! அவர் உன்மீது உயிரையே வைத்திருப்பதை இதன் மூலமாவது தெரிந்து கொள்!''

''எல்லாம் வெற்று நடிப்பு!''

பெட்டியைப் படாரென்று மூடினாள் நளினி.

**''அ**க்கா! யாரோ வந்திருக்கிறார்கள்.''

''வாருங்கள்'' என்று வரவேற்றாள் உஷா.

''நீங்கள் ஒரு முடிவும் சொல்லவில்லையே? நல்ல காரியத்தை முடித்து வைக்கலாம் என்று வந்திருக்கிறோம்!'' என்றார் தம் மனைவியுடன் வந்திருந்த சுந்தரின் நண்பர்.

''இப்போது எதையும் சொல்ல முடியாத நிலையில் இருக்கிறேன் நான்!''



வார்த்தையை மென்று விழுங்கினான் உஷா.

அவர்கள் கிளம்பிச் சென்று விட்டார்கள்.

''யார் அக்கா? எதற்காக வந்தார்கள்?''

''எதற்கும் இல்லை.''

''என்னிடம் சொல்லக் கூடாதா?''

''ஒன்றுமில்லை. நான் கணக்கையே தப்பாகப் போட்டு விட்டு விடை சரியாக இருக்கிறதா என்று பார்த்தேன்...''

நளினிக்கு அரைகுறையாகப் புரிந்தது. அவளுக்குத் தன்னுடைய தவறும் புரிந்தது.

'என்னுடைய கல்யாணம் சிறப்பாக நடக்க வேண்டும் என்பதற்காக அவள் எவ்வளவு கஷ்டங்களைத் தாங்கி யிருக்கிறாள்? ஒரு நாளாவது முகம் கோணியிருப்பாளா' அவள்? அவளுக்குத் திருமணம் செய்துகொள்ள என்ன தகுதி இல்லாமல் போய் விட்டது? அவள் என்னைப் போல் மனதில் ஆயிரம் கற்பனைகளைக் காணாமலா இருந்திருப்பாள்? அவளுக்குப் பிரதி உபகாரமாக எதையும் செய்யாவிட்டாலும் அவள் ஆசையை நிராசையாக்க விம்பு செய்து கொண்டு வந்து விட்டேனே... நானே முன்னின்று அவளுடைய திருமணத்தை நடத்தி வைத்து அவர்களிடம் ஆசி வாங்கினால்தான் எனக்கு விடிவு!'

நளினிக்கு மனத்தை எண்ணங்கள் நெருடின.

''அக்கா! நீ சம்மதித்து விடு...''

''எதுக்கு?''

''அதுதான், அந்தக் கல்யாணத்துக்கு!''

''கல்யாணம் என்று யார் சொன்னார்கள்?''

''எனக்குத் தெரியும்.''

உஷா பதில் கூறாது சிரித்தாள்.

''சமயத்தில் நீ முற்றுப் புள்ளியாக உன் சிரிப்பை வைத்துவிடுகிறாய்!''

மீண்டும் சிரித்தாள் உஷா. பிறகு—

''மரம் தென்றல் காற்றின் சுவையை அனுபவிக்க ஆசைப்படலாம். ஆனால் வேர் அந்தமாதிரி நினைக்கக் கூடாது. அது தப்பு..''



நளினி, பதில் கூறாது தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். உஷாவின் கண்கள் அவள் நெஞ்சைப் போலவே வறண்டிருந்தன.

**"உ**ஷா! நான் ஊருக்குப் போகப் போகிறேன்!'' என்றாள் நளினி திடீரென்று.

''எதற்கு? உன்னை நம்பி ஒரு மாசம் லீவு போட்டேன். பதினைந்து நாட்களில் என்ன அவசரம்?''

''இல்லை, எனக்கு அங்கு போக வேண்டும் போல் இருக்கிறது.''

''அவருக்குக் கடிதம் கூடப் போடாமலா?''

''ஆமாம்; தெய்வத்தின் காலில் விழ முன்னறிவிப்பு ஏதும் கொடுக்க வேண்டாம்!''

''அதைத் தூற்றவும் முன்னறிவிப்பு வேண்டாம். கடவுள் பொறுமையாக இருப்பதால் இல்லை என்று முடியாது. நினைவில் வை..... பெண்ணுக்குத் திருமணமானால் கணவன் தான் சகலமும்!''

''புரிகிறது உஷா!''

**ர**யிலடிக்குச் சென்று திரும்பித் தெருவில் வந்து கொண்டிருந்த உஷாவைத் தபால்காரர் நிறுத்தினார்.

''உங்களுக்கு ஒரு தபால்.''

அது ஒரு திருமண அழைப்பு. உறையைப் பிரித்தாள் உஷா.

'சுந்தர்...கமலா...!'

மணமகளின் பெயரையும் மணமகனின் பெயரையும் மாறி மாறி இரண்டு முறைகள் படித்தாள் அவள். பத்திரிகையைக் கைப்பையில் நுழைத்தாள்.

அவளுடைய மனதில் என்னவெல்லாம் தோன்றியதோ? ஆனால் வாய் மட்டும், ''ஒரு பத்து ரூபாய்க்குச் செலவு இருக்கிறது. நல்ல பரிசாகக் கொடுக்கணும். சுந்தர் நல்ல மனிதர்...'' என முணுமுணுத்தது.

ஒரு சிரிப்பு! நளினி சொன்னது போல் அது ஒரு முற்றுப்புள்ளி!

NOT ONE BUT

# TWO SPECIAL INDEPENDENCE DAY ISSUES

## Mrs Gandhi and Mr Bhutto



Independence Number—1

## Special Interviews

### by Khushwant Singh

## August 12

**What are Mrs Gandhi's views? What does President Bhutto feel? Khushwant Singh goes to Delhi and Karachi to find out what the two leaders have to say about Indo-Soviet ties and the growing Pak-US-Iran relations, Iran's massive military build-up, prisoners of war, war trials, Kashmir, Biharis in Bangladesh, Bengalis in Pakistan. Exclusive tape-recorded interviews.**

IN PAKISTAN TODAY: Khushwant Singh travels through the country to meet writers, lawyers, editors, students and the man in the street. Are they still smarting under defeat? Do they still want to settle scores with us? Does anyone want peace and friendship with India?

All illustrated with exclusive photographs in colour and black and white.

B. PRABHA: Nissim Ezekiel meets the well-known artist. A warm, personal, human interview. Reproductions of her paintings in colour.

AIMING FOR THE WORLD CUP: *Never have we prepared so thoroughly for an international hockey tournament as we have for the World Cup at Amsterdam. What are the prospects of India reversing the trend of events at Barcelona in 1971 and Munich in 1972? A special colour feature, with exciting action pictures. By Raju Bharatan.*

## August 19

THE STATE OF THE COUNTRY IN 1973



THE WORST YEAR SINCE INDEPENDENCE





## Special Interviews

### by Khushwant Singh

There has been political and economic instability. The common man has staggered through it under shortages, spiralling prices and a tiresome game of political musical chairs. What do Mrs Gandhi, Y. B. Chavan, D. P. Dhar and Rajni Patel have to say about it? And how do the critics—Cong-O's Morarji Desai, Jana Sangh's L. K. Advani, Socialist Madhu Limaye, Marxist Jyoti Basu, Swatantraite Minoo Masani—view the crises? Based on exclusive interviews.

DILIP KUMAR: He has been our most towering film personality since Independence. An exclusive interview of the matinee idol—and his lovely star wife SAIRA BANU—by award-winning cine journalist, Devyani Chaubal.

INDIA AS I SEE IT: A scathing expose by Satirist Aubrey Menen.

Mr SOOKHOO AND THE CAROL SINGERS: Story by Shiva Naipaul, the internationally known writer.

VIJAY AMRITRAJ: How good is he and how far will he go? Vijay all but beat Jan Kodes, the ultimate Wimbledon Champion. An assessment by India's non-playing captain and former star player, Ramanathan Krishnan, of Vijay Amritraj's potential. Complete with photographs of how he has grown from childhood into India's finest tennis prospect since Krishnan.

PAINTINGS OF THE YEAR: A selection of the best by Nissim Ezekiel.

**Remember The Dates:**

**August 12, 1973, August 19, 1973**

**Book Your Copies Today.**

**The Illustrated Weekly of India**

உங்கள் குடும்பத்திற்கு
ஏற்றது
மிகச்சிறந்ததே!

COLGATE
DENTAL CREAM

DC.G.49 TM

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய் துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி—கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும் விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**

பூரண பல்
பராமரிப்பிற்கு
**கால்கேட் டூத் பிரஷ்**
உபயோகியுங்கள்.
ஒவ்வொருவரின் தேவைக்கேற்றவாறு
அமைப—15 ரகங்கள்.

# வெட்டு வன்முறைக் காட்சிகளை — சுபஸ்ரீ





(செய்தி - வானொலித் துறை இலாகா மந்திரி திருவாய் மலர்ந்து அருளினார்: 'இனி - சினிமாப் படங்களில் வன்முறைக் காட்சிகள் தடை செய்யப் படும். செக்ஸ் காட்சிகளைப் பொறுத்த வரையில் கோஸ்லா கமிட்டி சிபாரிசுகள் கடைப்பிடிக்கப்படும்!' அதாவது துப்பாக்கி, சண்டைக் காட்சிகள் நீக்கப்பட்டு செக்ஸ் காட்சிகளில் கட்டுப்பாடுகள் தளர்த்தப்படும் என்று தெரியவருகிறது. இதன் விளைவு என்னாகும்?)

இந்தச் செய்தியைக் கேட்டவுடன் வில்லன் நம்பியார் பல்லை நறநறவென்று கடித்தார். மனோகர் அருகிலிருந்த சிங்கத்தின் முதுகிலே ஒரு குத்து விட்டார்.

அகில இந்திய வில்லன் மகாநாடு ஏற்காட்டிலே நடைபெற்ற போது, பிரதிநிதிகள் ஹெலிகாப்டரில் வந்து குதித்தனர். தலைவர் பிரான் ஒரு துப்பாக்கி வேட்டுடன் கூட்டத்தை ஆரம்பித்து வைக்க, நம்பியார் முன்மொழிய, ஓ. ஏ. கே. தேவர் வழிமொழிய, வன்முறைக் காட்சிகள் பற்றி அரசின் தடை விதிப்பு வன்மையாகக் கண்டிக்கப்பட்டது.

□ □ □

1983ம் ஆண்டு.

சினிமாவிலிருந்து ரிடையராகிவிட்டு இப்போது பெரிய அரசியல்வாதியாக வளர்ந்து விட்ட எம். ஜி. ஆரை நிருபர் சந்திக்கிறார்.

'இப்போதெல்லாம் சினிமாவில் சண்டைக் காட்சிகள் இல்லாததால் தங்களுக்கு சான்ஸ் வருவதில்லை என்பது உண்மையா ?'

'ஸ்டண்ட் புரியும் அரசு திரையில் ஸ்டண்ட் கூடாது என்று தடை விதித்து விட்டது. காரணம் வன்முறை அவர்களது உரிமை.'

'அதனால் அரசை நீங்கள் நிந்திக்கிறீர்களா?'

'வையவில்லை. வாழ்த்துகிறேன். வருமான வரித் தொந்தரவு இல்லை. அதனால் நீடித்த ஆயுள் உண்டல்லவா?'

□ □ □

'ஸ்ரீமதி ஜோதிலட்சுமி அவர்களே! முன்னாளில் 'பிஸ்டல் ராணி' என்னும் புகழ் பெற்ற தாங்கள் இப்போது....'

'சினிமாவில் மட்டும்தான் சண்டைக் காட்சி கூடாதா ? இலங்க அரசாங்கம் நடத்துகிற லட்சணத்தில் வாழ்க்கையே போராட்டம். அரிசி க்யூவில் அடிதடியும், மண்ணெண்ணெய் வரிசையில் மர்டரும் நடக்கின்றன. நான் திருமணம் செய்து கொண்டு சாதாரணமாக வாழ்கிறேன். சண்டையைப் பற்றி 'ஹோம் முனை'யில் நினைவுபடுத்தாதீர்கள். துப்பாக்கி தவழ்ந்த கைகளில் இன்று குழந்தை கொஞ்சுகிறது!'

□ □ □

'கவர்ச்சிகரமாக நடிப்போம். ஆனால் ஆபாசத்தை வெறுக்கிறோம்' என்று பேட்டி தோறும் கூறி வந்த காபரே நடிகைகள் ஆலம், ஜெய்குமாரி, சகுந்தலா, பத்மா கன்னா முதலியோர் 'டாப் ஸ்டார்'களாகத் திகழ்கிறார்கள். ஜெயலலிதா, கே. ஆர். விஜயா ஆகியோர் 'காரக்டர் நடிகை'களாகத் தலை நீட்டுகிறார்கள்.

ஜேம்ஸ்பாண்டு, மர்மவீரன் கதைகள் மறைந்து 'புத்தலை'ப் படங்களின் யுகம். ஸ்ரீமதி தங்கம் புஷ்பத்துரை, குமாரி அன்பு லதா போன்ற எழுத்தாளர்களின் கதைகளுக்கு சினிமாவில் கிராக்கி அதிகம்.

□ □ □

சர்க்கார் செய்திப் படங்கள் மிகுந்த பாபுலராக இருக்கின்றன. மெயின் படங்களை விடச் செய்திப்படங்களைப் பார்க்கவே தியேட்டர்களில் 'அடிதடி' நிகழ்கின்றன. 'மாணவர் ஸ்டிரைக் ; போலீஸ் அடக்குமுறை', 'பஸ் ஊழியர்கள் வேலைநிறுத்தம்; போலீஸ் சுட்டது', 'பார்லிமெண்ட் அங்கத்தினரிடையே கலவரம்; கை கலப்பு; ப்ரீ—பார்—ஆல் முஷ்டி யுத்தம்' போன்ற நிகழ்ச்சிகள் பற்றிய செய்திப் படங்களைப் பார்க்க ரசிகர்கள் திரளாகக் கூடினர். பார்க்கப் போனால் செய்திப் படம் முடிந்ததும் முக்கிய படம் பார்க்காமல் வீடு திரும்பியவர்களும் உண்டு. செய்திப்பட விளம்பர வாசகம் பெரிய அளவிலும், மெயின் பட விளம்பர வரிகள் சிறிய எழுத்திலும் சுவரொட்டிகளில் காணப்பட்டன.

புஸ்தகக் கடைகளில் ஆபாசப் புத்தகங்கள் கவனிப்பாரற்றுக் கிடந்தன. 'ஜேம்ஸ் பாண்டு' வரிசை நூல்களைக் 'கறுப்பில்' வாங்கி இருட்டில் படித்தனர். 'மார்க் போடாத ஆசிரியரை மாணவர் 'சதக் சதக்' என்று குத்தினார்! ஆசிரியர் 'ஐயோ' என்று துடி துடித்துச் செத்தார்' என்று வெளியிடும் தினசரியைப் படித்து விஸிலடிச்சான் குஞ்சுகள் திருப்தி அடைந்தன.

சென்னை

**வெலிங்டன் ஸ்ரீகிருஷ்ணா பாலாஜி கமலா**

மற்றும் தென்னகமெங்கும்



**சாந்தி கம்பைன்ஸ்**

# திருமலைத் தெய்வம்

ஈஸ்ட்மென்கலர்

திரைக்கதை வசனம் டைரக்ஷன்

**A.P.நாகராஜன்**



ELEGANT

# விளையாட்டு வீரரின் வியத்தகு சாதனை

**மனம் திருந்தினேன்**



சென்னை அக்கௌண்டென்ட் ஜெனரல் அலுவலகத்தில் செலக்ஷன் கிரேட் ஆடிட்டராகப் பணியாற்றும் திரு எம். கே. வேணு கோபால் ஒரு திறமை மிக்க விளையாட்டு வீரரும் ஆவார். ஹாக்கி, டேபிள் டென்னிஸ், பாட்மிண்டன், கேரம் ஆகிய விளையாட்டுகளில் நல்ல தேர்ச்சி உள்ளவர். இந்திய ஆடிட், அக்கௌண்ட்ஸ் டிபார்ட்மெண்ட் போட்டிகளில் அக்கௌண்டென்ட் ஜெனரல் அணியில் பல சந்தர்ப்பங்களில் விளையாடித் தமது திறமையால் இவ்வணிக்குப் பெருமை தேடித் தந்துள்ளார். வலிவுள்ள இவரது உடற்கட்டைப் பார்த்தவுடனேயே இவர் ஒரு சிறந்த விளையாட்டு வீரர் என்பது புலப்படும். சிரித்த முகத்துடன் நண்பர்களுடன் கலகலப்பாகப் பேசும் இனிய சுபாவம் உள்ளவர். நாற்பத்தொரு வயதுள்ள வேணு கோபாலுக்கு இரு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் உள்ளனர்.

ஒரு நாள் அன்பர் ஒருவர், ''ஹலோ ! வேணு! லைக் டு ஸ்மோக்?'' என்று கேட்டவாறு ஒரு சிகரெட் பாக்கெட்டைப் பிரித்து நீட்டுகிறார்.

''நோ ! நோ! தாங்க்ஸ் ! அதை விட்டு ஏழு, எட்டு மாசங்கள் ஆச்சு! ஜனவரிக்கு அப்புறம் சிகரெட்டைத் தொடவே இல்லே!'' என்று மறுத்துவிடுகிறார். அவரது நண்பர் சென்ற பிறகு திரு வேணுகோபாலை நெருங்கி விசாரிக்கிறேன்.

''நீங்கள் சிகரெட் பிடிக்கும் பழக்கத்தைக் கைவிடுமுன்னால் ஒரு நாளைக்கு எத்தனை சிகரெட்டுகள் பிடிப்பது வழக்கம்?''

''தினந்தோறும் இரண்டு பாக்கெட்டுகள்; அதாவது இருபது சிகரெட்டுகள்.''

''என்ன செலவாகும் ?''

'' பாக்கெட் ஐம்பது பைசா விலே. நான் ஒன்றுக்கு ரூ. ஒன்று அறுபது.''

''அதாவது, மாதம் சுமார் ஐம்பது ரூபாய், இல்லையா?''

''ஆமாம்; பணம் மிச்சம் என்பது ஒருபுறமிருக்க, உடல் நலம் பாதிக்கப்படாமலிருக்கும் என்கிற ஒரு நம்பிக்கையும் இப்போ ஏற்பட்டிருக்கு. இப்படியே தினமும் இரண்டு பாக்கெட் சிகரெட் பிடிச்சுக்கிட்டே வந்தா — நாளடைவிலே இன்னும் அதிகமாகப் போனாலும் போகலாம் — அப்புறம் இதயத்தையோ, நுரையீரல்களையோ இது பாதிக்குமோ என்கிற பயம்தான் நான் இதை விட்டு விடக் காரணம்.''

''இந்தப் பழக்கம் உங்களுக்கு எப்படி, எப்போது ஏற்பட்டது, மிஸ்டர் வேணு கோபால்?''

''1952ம் ஆண்டுதான் இது பழக்கமாயிற்று. ஹாக்கி விளையாட்டுப் போட்டிகளில் பங்கெடுத்துக் கொண்டு விளையாடி முடிந்ததும் 'பார்ட்டி'கள் நடைபெறுவது வழக்கம். நண்பர்கள் சிலர் சிகரெட் வழங்கி உபசரிப்பார்கள். இப்படித்தான் பழக்கமாயிற்று. முதலில் இரண்டு, மூன்று சிகரெட்டுக்கள். அப்புறம் நாளடைவில் நாள் ஒன்றுக்கு ஒரு பாக்கெட். இப்படியே படிப்படியாக வளர்ந்து கொண்டே போய் இரண்டு பாக்கெட்டில் வந்து நின்றது.''

''சுமார் இருபது வருடங்கள் சிகரெட் பிடித்துப் பழகிய பிறகு இதை விட்டுவிடுவது சுலபமாக இருந்திராதே ? எப்படி நிறுத்தினீர்கள்?''

''இம்மாதிரிப் பழக்கங்களை விட்டொழிப்பது எளிதில்லே. Habits Die hard. கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டே வந்து நிறுத்திவிடுவது என்பது சாத்தியமேயில்லே. அப்படிப்பட்ட முயற்சிகளெல்லாம் பலிக்கவில்லே. சிகரெட்டுகளின் எண்ணிக்கையைக் குறைத்து, இறுதியில் விட்டுவிடும் முயற்சிகளில் நான் பல தடவைகள் தோல்வியே கண்டிருக்கிறேன். ஜனவரி மாதம் மூன்று நாட்கள் தொடர்ந்து எனக்குக் காய்ச்சல் அடித்தது. அதற்கு முன்பு எனக்கு நோய் நொடி என்று ஏதும் வந்ததில்லே. அந்தச் சந்தர்ப்பத்தில் சிகரெட் பிடிப்பதை நிறுத்தினேன். குறிப்பாகச் சொல்ல வேண்டு



## 'டீன் ஏஜ்' கதை அங்கே ; அறிமுகம் இங்கே !

''இந்தக் கணத்தில் அறிமுகமாகும் இளம் எழுத்தாளன் நான்'' என்று ஆரம்பித்து, அசோக்குமார் தொடர்ந்து எழுதுகிறார்: ''சரியான டீன்ஏஜ். சுஜாதா விசிறி. தஞ்சாவூர் ஜில்லா நன்னிலம் உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல்.சி. வரையில் படித்தேன். காவிரி டெல்டாவின் செழுமை என் உடலில் விரவிக் கிடக்காவிட்டாலும், என் மூளையில் விரவிக் கிடப்பதை என் பாக்கியமெனக் கருதுகிறேன். தற்போது, திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியில் புகுமுக வகுப்புப் பயில்கிறேன். என்றும் மறக்க முடியாதது – சரியாக இரண்டு மாதங்களுக்கு முன்னால் திரு பாலசந்தர் என் எழுத்தில் நல்ல நகைச்சுவை இருக்கிறது எனச் சொல்லி, என்னைக் கதை எழுதத் தூண்டியது. நான் நன்றி சொல்வது– என் கன்னி முயற்சியை அரங்கேற்றி, என்னையும் எழுத்தாளனாக்கிய கல்கிக்கு''

மென்றால் ஜனவரி மாதம் 26ந் தேதி முதல் அந்தப் பழக்கத்தைக் கைவிட்டேன்.''

''மீண்டும் எப்போதாவது சிகரெட் பிடிக்க வேண்டும் என்ற சபலம் தலைகாட்டியதா?''

''சில சமயங்களில் ஏதோ ஒரு மாதிரி depressed ஆக இருக்கும். சிகரெட்டை விட்டதனால்தானோ என்று தோன்றும். மனப் பிரமைதான் ! ஒரு சைகலாஜிகல் ஃபீலிங்... அவ்வளவுதான்.''

''சிகரெட் பழக்கத்தை விட்டுவிடும்படி உங்கள் உறவினர்கள் யாராகிலும் வற்புறுத்தியிருக்கிறார்களா ?''

'' ஓ ! என் மனைவி அடிக்கடி கூறியதுண்டு. என் சகோதரரும் கூறுவார். வீட்டிலே இருக்கும் போதும் நான் சிகரெட் பிடிப்பது வழக்கம். எல்லோருக்கும் தெரியும். நானே விட்டுவிட வேண்டும் என்று தீர்மானித்த நிலையில் அவர்களின் வற்புறுத்தலும் சேர்ந்து கொள்ளவே அறவே விட்டுவிட்டேன்.''

''சிகரெட் புகைப்பதன் மூலம் நீங்கள் உற்சாகம் அடைந்த சந்தர்ப்பங்கள் உண்டா ?''

''விளையாட்டுப் போட்டிகளில் தோற்றுப் போய்விட்டால், மன நிலை சற்றுச் சோர்வாக இருக்கும். அப்போதெல்லாம் சிகரெட் பிடித்து ஆறுதல் பெறுவதுண்டு. எஸ்.ஏ.எஸ். பரீட்சைக்குப் படித்தபோது, இரவில் அதிக நேரம் கண் விழிக்கச் சிகரெட்டின் உதவியை நாடுவது வழக்கம்.''

''இப்போதுதான் எஸ். ஏ. எஸ். பரீட்சை 'பாஸ்' பண்ணிவிட்டீர்களே – இனிமேல் சிகரெட்டின் தயவு தேவையில்லை, அல்லவா?''

திரு வேணுகோபால் சிரிக்கிறார். ''இருபது வருஷங்கள் இந்தப் பழக்கம் என்னைத் தீவிரமாகப் பற்றிக் கொண்டிருந்தது. இப்போது ஒரேயடியாக அதனை உதறிவிட்டேன். இன்னும் பல வருடங்களுக்கு முன்பாகவே அதைக் கைவிட்டிருந்தால் என் உடல் நலம் இன்னும் நன்றாக இருந்திருக்கக் கூடும் என்றுதான் தோன்றுகிறது. இப்போதாவது விட்டுவிட முடிந்ததே என்று திருப்தி அடைந்திருக்கிறேன் !''

''நீங்கள் அடைந்துள்ள திருப்தியைவிட உங்கள் குடும்பத்தவர் அதிகமாகவே இது குறித்து மன நிறைவு பெற்றிருப்பார்கள், இந்த ஏழு எட்டு மாத காலத்தில்!'' என்று அன்பர் வேணுகோபாலைப் பாராட்டி விடை பெறுகிறேன். விளையாட்டுப் போட்டிகளில் அவர் நிகழ்த்திய சாதனைகளைவிட இது மகத்தான சாதனை அல்லவா? பேட்டி: 'பாணன்'



☐ இலங்கையில் வேல் திருவிழாவின் போது தங்க ரதத்திலே வேல் ஊர்வலமாக வந்தது. இலங்கைப் பிரதமர் இல்லத்தை ஊர்வலம் அணுகியபோது ஸ்ரீமதி சிரிமாவோ பண்டாரநாயகாவுக்கு வேல் திருவிழாவின் மகிமையைச் செட்டியார் வர்த்தக சங்கத்தின் தலைவர் திரு ஆர்எம். பழனியப்ப செட்டியார் விளக்கினார். அருகே தர்மகர்த்தா திரு வி. நாச்சியப்ப செட்டியாரும் இருப்பதைப் படத்தில் காணலாம்.

☐ காந்திய நெறியிலும் வள்ளலார் காட்டிய வழியிலும் ஈடுபாடுகொண்ட தொழிலதிபர் திரு என். மகாலிங்கம் அவர்களின் பொன்விழா ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் இரு நாட்கள் அதிவிமரிசையாக நடைபெற்றது. தமிழக ஆளுநர் கே. கே. ஷா, மத்திய சர்க்கார் மந்திரி ஜகஜீவன்ராம், தமிழக முதல்வர் மு. கருணாநிதி முதலியோர் இவ்விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தனர். பல அறிஞர்களும் கலைஞர்களும் வள்ளல் மகாலிங்கத்தின் பெருமையை எடுத்துரைத்தனர். மதம் பற்றிக் கருத்தரங்கும் நடைபெற்றது. அறிவாற்றலும் அனுபவமும் மிகுந்த திரு என். மகாலிங்கம் அவர்கள் எழுதிய 'Some thoughts on Planning' 'Some thoughts on Sugar Industry' என்னும் இரு ஆங்கில நூல்கள் இவ்விழாவின்போது வெளியிடப்பட்டன.



# கொடுக்கும் பணத்திற்குக் கூடுதல் பலனளிக்கும் ஒரே பெயிண்ட்




வண்ண உலகைக் கொடிகட்டி ஆளும்

**ஏஷியன் பெயிண்ட்ஸ்** தயாரிப்பு

AIYARS-AA 1.387 TM

# இலவசம்!




## புத்தம் புதிய போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்! இன்றே இக் கூப்பனை அனுப்புங்கள்.

மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.

''பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் போர்ஹென்ஸ் புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும். தபால் செலவுக்காக 20 காசு தபால் தலை அனுப்பியுள்ளேன். K.G.D.A

பெயர் ______________________ வயது __________

முகவரி ______________________

______________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மாராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

100F-152 TAMR

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி



மூன்றும் அத்தியாயம்

## கடவுள் காப்பாற்றினர்

மின்னல் மின்னுகிற நேரத்தில் மத யானையின் மீது ஓர் இளம் பிள்ளை வேலை எறிந்ததையும், யானை திரும்பி அவனைத் துரத்திச் சென்றதையும், சிவிகையிலிருந்து பெரியவரும் இளம் பெண்ணும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்த வாலிபனின் தீரமும் துணிச்சலும் அவர்களுக்குப் பெரு வியப்பை உண்டு பண்ணின.

அந்தப் பிள்ளைக்கு அபாயம் நேராமல் இருக்க வேண்டுமே என்று அவர்களுடைய உள்ளங்கள் துடிதுடித்தன.

அவனுக்கு என்ன நேர்ந்தது என்று தெரிந்துகொள்ளும் ஆவலினால் சிவிகைக்குள்ளிருந்து பரபரப்புடன் வெளியே வந்தார்கள். அந்தச் சமயம் அவ் விசாலமான வீதி ஜன சூனியமாய்க்



காணப்பட்டது. ஓர் ஈ காக்கை அங்கே கிடையாது.

பல்லக்கிலிருந்து இறங்கிய மனிதர் அந்த இளம் பெண்ணின் முதுகில் கையை வைத்து அணைத்துக்கொண்டு அன்பு கனிந்த குரலில், "பயமாயிருக்கிறதா, சிவகாமி?" என்று கேட்டார்.

"இல்லவே இல்லை, அப்பா! பயமில்லை!" என்றாள் சிவகாமி.

பிறகு அவள், "நல்ல சமயத்தில் அந்த வாலிபன் மட்டும் வந்து யானையைத் திருப்பியிராவிட்டால் நம்முடைய கதி என்னவாகியிருக்கும்?" என்றாள்.

"பல்லக்கு சுக்குநூறாகி யிருக்கும்!" என்றார் தந்தை.

"ஐயோ!" என்றாள் அந்த இளம் பெண்.

"அதற்காகத்தான் சிவிகையைக் கீழே வைத்துவிட்டுச் சிவிகைதூக்கிகளை ஓட்டம் எடுக்கச் சொன்னேன். நாமும் பக்கத்து வீட்டுக்குள் ஓடித் தப்பியிருக்கலாம். ஆனாலும், வந்த அபாயம் பெரிதுதான்!" என்றார் பெரியவர்.

நாற்புறமும் சிதறி ஓடிய ஜனங்கள் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஒவ்வொருவராகத் திரும்பி வர ஆரம்பித்தார்கள்.

வந்தவர்கள் எல்லாரும் அங்கு நிகழ்ந்தவைகளைப் பற்றி ஏககாலத்தில் பேச ஆரம்பிக்கவே, சற்றுமுன் நிசப்தம் குடிகொண்டிருந்த இடத்தில் "கலகல"வென்ற பேச்சொலி எழுந்தது.

"ஆகா! ஆயனரும் அவர் மகளும் அல்லவா! நல்ல வேளையாய்ப் போயிற்று. கடவுள்தான் காப்பாற்றினார்!" என்று ஜனங்கள் பலவாறாகப் பேசிக் கொண்டு நின்றார்கள்.

கடவுள் காப்பாற்றினார் என்றாலும், அவர் அந்த வீர வாலிபனுடைய உருவத்தில் வந்தல்லவா காப்பாற்றினார்! அந்தப் பிள்ளை யாராயிருக்கும்? அவனுடைய கதி என்னவாயிற்று?—இதைப் பற்றித்தான் ஆயனரும் அவருடைய மகளும் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் அந்த இளம் பிள்ளையைப் பற்றி அவர்களுக்குத் தகவல் தெரிவிக்கக் கூடியவர்கள் யாருமில்லை.

ஆயனர், யானை கடைசியாக நின்ற இடத்தின் அருகே சென்றார். அங்கே யானையின் காலில் மிதிபட்டு முறிந்து கிடந்த வேலைக் கையில் எடுத்துக் கொண்டார். இன்னும் சற்றுத் தூரத்தில் அவிழ்ந்து கிடந்த மூட்டையை அவர் கட்டி எடுத்துக்கொண்டு திரும்பிச் சிவிகையண்டை வந்தார். சிவ



காமி அந்த முறிந்த வேலை வாங்கி வியப்புடன் நோக்கினாள்.

ஆயனர், ''சிவகாமி ! இங்கே வீணாக நின்று கொண்டிருப்பதில் பயனில்லை. நாம் போகலாம்; எல்லா விவரமும் தானே நாளைக்குத் தெரிந்து விடுகிறது !'' என்றார்.

தந்தையும் மகளும் சிவிகைக்குள் ஏற உத்தேசித்த சமயத்தில் சற்றுத் தூரத்தில் குதிரைகள் அதிவேகமாக வரும் சப்தத்தைக் கேட்டுத் தயங்கி நின்றார்கள்.

நிலா வெளிச்சத்தில், முன்னால் இரண்டு வெண் புரவிகள் பாய்ந்து வருவதும், பின்னால் ஐந்தாறு குதிரைகள் தொடர்ந்து வருவதும் தெரிந்தன. முன்னால் வந்த குதிரைகளில் இரண்டு கம்பீர புருஷர்கள் ஏறி வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து வந்த குதிரைகளின் மீது வேல் பிடித்த வீரர்கள் காணப்பட்டனர்.



குதிரைகள் சிவிகைக்குப் பக்கத்தில் வந்து நின்றதும் ஜனங்கள் பயபக்தியுடன் சிறிது விலகிக் கொண்டார்கள்.

''மகேந்திர மகா பல்லவர் வாழ்க!'' ''திரிபுவன சக்கரவர்த்தி வாழ்க !'', ''குணபுர மகாராஜா வாழ்க!'' ''குமார சக்கரவர்த்தி மாமல்லர் வாழ்க !'' என்ற கோஷங்கள் நாற்புறமும் எழுந்தன.

வெண் புரவிகளில் முன்னால் வந்தவர்கள் மகேந்திர சக்கரவர்த்தியும், அவருடைய ஏக புதல்வர் நரசிம்ம பல்லவரும்தான் என்பதை ஆயனரும், சிவகாமியும் உணர்ந்ததும்

அவர்களுக்குப் பெரிதும் வியப்பு உண்டாயிற்று.

சிவகாமி ஆயனருக்குப் பின்னால் ஒதுங்கி நாணத்துடன் நின்றாள். அவளுடைய விசாலமான கரிய கண்கள் மகேந்திர சக்கரவர்த்திக்குப் பின்னால் குதிரை மீது வீற்றிருந்த குமார சக்கரவர்த்தியை நோக்கின.

மகேந்திர சக்கரவர்த்தி, ''ஆயனரே! இது என்ன? நான் கேள்விப்பட்டது விபரீதமாக அல்லவா இருக்கிறது?'' என்று சொல்லிக் கொண்டே குதிரையின் மீதிருந்து இறங்கினார்.

''ஏகாம்பரர் அருளால் அபாயம் ஒன்றும் நேரவில்லை, பிரபு!'' என்றார் ஆயனர்.



''சிவகாமி ரொம்பவும் பயந்து போய் விட்டாளா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''சிவகாமி பயப்படவில்லை. இதையெல்லாம் அவள் ஏதோ வேடிக்கை என்று எண்ணிக் கொண்டிருக்கிறாள்!'' என்று ஆயனர் கூறி, அன்பு நிறைந்த கண்களால் தமக்குப் பின்னால் அடக்கத்துடன் நின்ற சிவகாமியைப் பார்த்தார்.

அப்போது சக்கரவர்த்தியும் அவளைப் பரிவுடன் நோக்கி, ''சிவகாமி! ஏன் தலை குனிந்து கொண்டிருக்கிறாய்? அரங்கேற்றத்தின்போது நடுவில் போய்விட்டேனே என்று என் பேரில் மனஸ்தாபமா?'' என்றார்.

சிவகாமியின் முகத்தில் நாணத்துடன் கூடிய புன்னகை மலர்ந்தது. அவள் மௌனமாயிருந்தாள்.

அப்போது ஆயனர், ''பல்லவேந்திரா! சிவகாமிக்கு அவ்வளவு தெரியாதா? ஏதோ மிகவும் முக்கியமான காரியமாதலால்தான் தாங்கள் நடுவில் எழுந்து போயிருக்க வேண்டும்.....'' என்றார்.

''ஆமாம், ஆயனரே! ரொம்ப முக்கியமான காரியந்தான். எல்லாம் பிறகு விவரமாகச் சொல்லுகிறேன். மந்திராலோசனை முடிந்து வெளியில் வந்ததும் உங்களைப் பற்றி விசாரித்தேன். நீங்கள் புறப்பட்டுவிட்டதாகத் தெரிந்தது. ஏன் இவ்வளவு அவசரமாகக் கிளம்பினீர்கள்?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''இராத்திரி வீடு போய்ச் சேர்ந்தால்தானே, காலையில் என் வேலையைத் தொடங்கலாம்? ஒருநாள் என்றால், ஒரு நாள் வீணாகப் போக வேண்டாமென்றுதான் இன்றே புறப்பட்டேன், பிரபு!''

''ஆமாம்; உமது தெய்விகச் சிற்பக் கலையை விட்டுவிட்டு உம்மால் ஒரு நாள்கூட இருக்க முடியாதுதான். இப்போதும் இராத்திரியே போவதாகத்தான் உத்தேசமோ?''

''ஆம், பல்லவேந்திரா! பட்டப் பகலைப் போல் நிலா எரிகிறது. இரவு போய்விடுவதே சௌகரியம்.''

''இந்த வெண்ணிலாவைப் பார்த்தால் எனக்குக்கூட உம்முடன் வர வேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால் அது முடியாத காரியம். நாளை அல்லது மறுநாள் வருகிறேன்'' என்று கூறிச் சக்கரவர்த்தி திரும்பிப் பார்த்தார்.

அப்போது, சக்கரவர்த்திக்குப் பின்னால் இன்னொரு வெண் புரவியின் மேல் இருந்த நரசிம்மவர்மர் வெகு லாகவத்துடன் குதிரை மேலிருந்து கீழே குதித்துச் சக்கரவர்த்தியின் பக்கத்தில் வந்து, ''அப்பா! யானைமீது வேல் எறிந்த வாலிபனைப் பற்றி விசாரிக்கவில்லையே?'' என்று கூறிவிட்டு, ஆயனரைப் பார்த்து, ''அந்த வாலிபன் யார்? அவன் எங்கே சென்றான்? உங்களுக்கு ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டார்.

''அதுதான் தெரியவில்லை. வேலை எறிந்ததும் அவன் மின்னலைப்போல் மறைந்துவிட்டான். ஆனால், அப்படி மறைந்ததினாலேயே உயிர் தப்பிப் பிழைத்தான். தேசாந்தரம் வந்த பிள்ளையாகத் தோன்றியது'' என்றார் ஆயனர்.

குமார சக்கரவர்த்தி ஆயனருடன் பேசிக் கொண்டிருக்கையில் அவருடைய கண்கள் மட்டும் ஆயனருக்குப் பின்னால் இருந்த சிவகாமியின் மீது நின்றன.

நரசிம்மவர்மர் சற்றுத் தூரத்தில் குதிரை மீதிருந்தபோது அவரை ஏறிட்டுத் தீவிர நோக்குடன் பார்த்த சிவகாமியோ இப்போது அவர் பக்கமே பார்க்காமல் பூமியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். தரையில், அவள் அருகில், சற்று முன்னால் அவள் கையிலிருந்து நழுவிய முறிந்த வேல் கிடந்தது.

அதைப் பார்த்த நரசிம்மவர்மர், "சிவகாமி! இது என்ன?" என்று கேட்டுக் கொண்டே அவள் அருகில் சென்றார். சிவகாமி சிறிது பின்வாங்கி, முறிந்த வேலைத் தரையிலிருந்து எடுத்து அவர் பக்கம் நீட்டினாள். அதை நரசிம்ம வர்மர் வாங்கிக் கொண்டபோது, அவருடைய கை விரல்கள் சிவகாமியின் விரல்களைத் தீண்டியிருக்க வேண்டும். தேள் கொட்டியவர்களைப் போல் அவர்கள் அவசரமாக விலகிக் கொண்டதிலிருந்து இதை ஊகிக்கக் கூடியதாயிருந்தது.

நரசிம்மவர்மர் தம் தேகத்தில் ஏற்பட்ட படபடப்பை ஒருவாறு சமாளித்து அடக்கிக் கொண்டு, ஆயனரைப் பார்த்து, "உங்களை மத யானையின் கோபத்திலிருந்து காப்பாற்றியது இந்த வேல்தானா ஆயனரே?" என்று கேட்டார்.

"ஆமாம், பல்லவ குமாரா!" என்று ஆயனர் மேலும் ஏதோ சொல்லுவதற்குள், மாமல்லர் தந்தையைப் பார்த்து, "அப்பா! இந்த வேலுக்கு உடையவனைக் கட்டாயம் கண்டுபிடிக்க வேண்டும்; அவன் நல்ல சமயத்தில் இத்தகைய வீரச் செயலைப் புரிந்திராவிட்டால், பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா சிற்பியை அல்லவா இந்நேரம் இழந்திருப்போம்?" என்றார்.

அதற்குச் சக்கரவர்த்தி, "மகா சிற்பியை மட்டுந்தானா? பல்லவ ராஜ்யத்தின் தலைசிறந்த கலைவாணியையும் இழந்திருப்போம்! அந்த வீரனைக் கண்டுபிடிக்க வேண்டியது அவசியந்தான். இவர்கள் இப்போது புறப்பட்டுச் செல்லட்டும். ஏற்கனவே நேரம் அதிகமாகி விட்டது!" என்று சொல்லிவிட்டுச் சிவகாமியைப் பார்த்து, "குழந்தாய்! உன்னுடைய ஆட்டம் இன்று அற்புதமாயிருந்தது. முழுமையும் பார்க்கத்தான் முடியாமல் போயிற்று" என்றார்.

பின்னர் அவள் தந்தையை நோக்கி, "ஆயனரே! உம்முடன் பேச வேண்டிய விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. சீக்கிரத்தில் மாமல்லபுரம் வருகிறேன். இப்போது ஜாக்கிரதையாய்ப் போய்ச் சேருங்கள்" என்று சொன்னார்.

அங்கே தாம் நிற்கும் வரையில் ஆயனரும் அவர் மகளும் பல்லக்கில் ஏற மாட்டார்கள் என்பதை அறிந்த சக்கரவர்த்தி விரைந்து சென்று குதிரையின் மேல் ஏறினார். நரசிம்மவர்மரும் தம் குதிரை மீது ஏறிக் கொண்டார்.



குதிரைகள் புறப்படுமுன் மகேந்திர பல்லவர் தமக்குப் பின்னால் நின்ற வீரர்களில் ஒருவனைச் சைகையினால் கூப்பிட்டு, "அயலூரிலிருந்து புதிதாக வந்த இளைஞன் யாராயிருந்தாலும் இன்றிரவு அவனைப் பிடித்து வைத்திருந்து நாளைக்கு அரண்மனைக்கு அழைத்து வர வேண்டும். நகர்க் காப்புத் தலைவனுக்கு இந்தக் கட்டளையை உடனே தெரியப்படுத்து!" என்று ஆக்ஞாபித்தார்.

சக்கரவர்த்தியும் குமாரரும் அங்கிருந்து போனதும், ஆயனரும் சிவகாமியும் தங்கள் சிவிகையில் அமர்ந்தார்கள். காவலர் புடைசூழ, சிவிகை காஞ்சிக் கோட்டையின் கீழ வாசலை நோக்கிச் சென்றது.

### நான்காம் அத்தியாயம்

## துர்ச்சகுனம்

வீதி ஓரத்திலிருந்த சுமைதாங்கியின் மீது பரஞ்சோதி சாய்ந்து கண்ணை மூடிக் கால் நாழிகைகூட இராது. ஏதோ



பேச்சுக் குரலைக் கேட்டுத் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு கண் விழித்தான். தெருவில் யாரோ இவ்விதம் பேசிக் கொண்டு போனார்கள்:

''கோயில் யானைக்கு மதம் பிடித்தால் துர்ச் சகுனம் என்று சொல்கிறார்களே?''

''ஆமாம்! நாட்டுக்கு ஏதோ பெரிய விபரீதம் வரப் போகிறது.''

''யானைக்கு எப்படி மதம் பிடித்ததாம்?''

''யாருக்குத் தெரியும்? யாரோ அசுரான் ஒருவன் யானையின் மேல் வேலை வீசி எறிந்தானாம். அதனால் யானைக்கு வெறி பிடித்துவிட்டது என்று சொல்கிறார்கள்!''

''ஆயனச் சிற்பியும் அவருடைய மகளும் பிழைத்தது புனர்ஜன்மம் என்கிறார்களே?''

''அப்படித்தான்; அரங்கேற்றம் நடுவில் நின்றது போதாதென்று இந்த ஆபத்து வேறே அவர்களுக்கு நேர்ந்துள்ளது.''

அதற்கு மேல் பரஞ்சோதிக்கு அவர்கள் பேசியது கேட்கவில்லை. ''வேலை எறிந்ததனால் யானைக்கு மதம் பிடித்துவிட்டதாம்!'' என்னும் பேச்சுக் காதில் விழுந்ததும், பரஞ்சோதியின் உள்ளம் திடுக்கிட்டது. அப்போது அவனுக்கு இன்னொரு விஷயமும் ஞாபகம் வந்தது. அவன் கொண்டு வந்திருந்த மூட்டையை நடுத்தெருவிலேயே போட்டுவிட்டு அவன் ஓடி வந்துவிட்டான். நாவுக்கரசருக்கும் ஆயனச் சிற்பிக்கும் அவன் கொண்டு வந்திருந்த ஓலைகள் அந்த மூட்டையில் இருந்தன. இன்னும் அவனுடைய துணிமணிகளும், அவன் கொண்டு வந்திருந்த சொற்பப் பணமும் மூட்டைக்குள்ளேதான் இருந்தன. அதை அவசியம் கண்டுபிடித்தாக வேண்டும். போட்ட இடத்திலேயே மூட்டை கிடைக்குமா? திக்குத் திசை புரியாத இந்தப் பெரிய நகரத்தில் அந்த இடத்தை மறுபடியும் கண்டு பிடிப்பது எப்படி?

பரஞ்சோதி சுமைதாங்கியிலிருந்து இறங்கி, தான் ஓடி வந்த வழி எதுவாயிருக்கும் என்று ஒருவாறு ஊகித்துக் கொண்டு அந்தத் திசையை நோக்கி நடக்கத் தொடங்கினான். இதற்குள், வீதிகளில் ஜனநடமாட்டம் வெகுவாகக் குறைந்து போயிருந்தது. வீட்டுக் கதவுகளையெல்லாம் சாத்தியாகி விட்டது. வீதி விளக்குகளை அணைத்து விட்டார்கள். நல்லவேளையாகப் பூரண சந்திரன் பால் போன்ற வெண்ணிலவைப் பொழிந்து கொண்டிருந்தான். நிலா வெளிச்சத்தில் நாற்புறமும் கூர்மையாகப் பார்த்துக் கொண்டு பரஞ்சோதி வெகுநேரம் நடந்தான். எவ்வளவு நடந்தும், யானையைச் சந்தித்த இடத்தை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. மூட்டையையும் அவன் எங்கும் காணவில்லை.

நேரமாக ஆக, வீதிகளில் நிசப்தம் குடிகொண்டது. உச்சி வானத்தில் சந்திரனைப் பார்த்து அர்த்த ராத்திரியாகி விட்டது என்பதைப் பரஞ்சோதி தெரிந்து கொண்டான். கால்கள் இனி நடக்க முடியாதபடி சோர்ந்துபோயின. உடம்பை எங்கேயாவது கீழே போட்டால் போதும் என்று அவனுக்கு ஆகிவிட்டது. இனிமேல் மூட்டையைத் தேடுவதில் பயனில்லை. நாவுக்கரசர் மடத்துக்கு எப்படியாவது போய்ச் சேர்ந்தால் போதும்.

ஆனால், எப்படிப் போவது? வழி கேட்பதற்குக்கூட வீதிகளில் யாரையும் காணோம். லட்சக்கணக்கான ஜனங்கள் வாழ்ந்த அந்தப் பெரிய நகரத்தில் தான் மட்டும் தன்னந்தனியாக அலைவதை நினைத்தபோது பரஞ்சோதிக்கு எப்படியோ இருந்தது. இராத்திரியெல்லாம் இப்படியே அலைந்துகொண்டிருக்க வேண்டியதுதானோ? ஆயிரக்கணக்கான மாளிகைகளும், மண்டபங்களும், வீடுகளும் நிறைந்துள்ள இந்த நகரில், தனக்கு இரவில் தங்குவதற்கு இடம் கிடையாதா? — நல்லவேளையாக இதோ, யாரோ வருகிறார்கள் போலிருக்கிறது. பேச்சுக் குரல் கேட்கிறது. அவர்களை மெதுவாக விசாரித்துப் பார்க்கலாம்.

ஒரு வீதியின் முடுக்கில் இரண்டு பேர் பேசிக் கொண்டு வந்தார்கள். அவர்களைப் பார்த்தால் நகர்க் காவலர்கள் என்று தோன்றியது. பரஞ்சோதி

யைப் பார்த்ததும் அவர்களே நின் றார்கள்.

''யாரப்பா நீ? நடு ராத்திரியில் எங்கே கிளம்பினாய்?'' என்று அவர் களில் ஒருவன் கேட்டான்.

''நான் அயலூர், ஐயா.....!'' என்று பரஞ்சோதி சொல்ல ஆரம்பிப்பதற்குள் முதலில் பேசியவன், ''அயலூர் என்றால், எந்த ஊர்?'' என்றான்.

''சோழ தேசம்.....''

''ஓகோ! உறையூரா ?''

''இல்லை, ஐயா ! கீழைச் சோழ நாட்டில் செங்காட்டாங்குடி கிராமம். இன்று மாலைதான் காஞ்சிக்கு வந்து சேர்ந்தேன்.''

''அப்படியா? இங்கு எதற்கு வந் தாய் ?''

'' நாவுக்கரசர் மடத்தில் தமிழ் பயில்வதற்காக வந்தேன்.''

''அப்படியானால், நள்ளிரவில் தெரு வீதியில் ஏன் அலைகிறாய் ?''

''மடம் இருக்குமிடம் தெரியவில்லை. சாயங்காலத்திலிருந்து தேடிக் கொண் டிருக்கிறேன்.''

அந்தக் காவலர்கள் இருவரும் இலேசாகச் சிரித்த சிரிப்பில் பரிகாசம் தொனித்தது. அவர்களில் ஒருவன், ''நாவுக்கரசர் மடத்துக்கு நீ கட்டாயம் போக வேண்டுமா?'' என்று கேட் டான்.

''ஆம், ஐயா !''

''நாங்கள் அந்தப் பக்கந்தான் போகி றோம். நீ வந்தால் அழைத்துக்கொண்டு போய் விடுகிறோம்.''

பரஞ்சோதி காவலர்களுக்கு வந்த னம் சொல்லிவிட்டு அவர்களைப் பின் தொடர்ந்து சென்றான். சற்று நேரத் துக்கெல்லாம் அவர்கள் உயரமான மதில் சுவர்களை உடைய ஒரு கட்டடத் தின் வாசலில் வந்து நின்றார்கள்.

''இதுதான் மடமா?'' என்று கேட் டான் பரஞ்சோதி.

'' ஆமாம் ; பார்த்தால் இது மட மாகத் தோன்றவில்லையா?''

உண்மையில் பரஞ்சோதிக்கு அது மட மாகத் தோன்றவில்லை. அருகில் கோயில் எதையும் காணவில்லை. கட்ட டத்தின் உயரமான சுவர்களும், வாசற் கதவில் பூட்டியிருந்த பெரிய பூட்டும் அவனுக்கு இன்னதென்று தெரியாத சந்தேகத்தை உண்டாக்கின.

அவனை அழைத்துப் போனவர்களில் ஒருவன் வாசல் கதவண்டை சென்று அங்கேயிருந்த காவலாளியிடம் ஏதோ சொன்னான்.

உடனே பூட்டுத் திறக்கப்பட்டது ; கதவும் திறந்தது.

''வா, தம்பி !''

நெஞ்சு 'திக் திக்' என்று அடித்துக் கொள்ள, பரஞ்சோதி வாசற்படியைத் தாண்டி உள்ளே சென்றான்.

இரு புறமும் உயரமான சுவர் எழுப்பிய குறுகிய சந்தின் வழியாக அவனை அழைத்துப் போனார்கள். ஓர் இடத்தில் நின்றார்கள். அங்கிருந்த அறையின் கதவு திறக்கப்பட்டது.

''இங்கே படுத்திரு. மடத்தில் எல் லோரும் தூங்குகிறார்கள். பொழுது விடிந்து பார்த்துக் கொள்ளலாம்'' என்றான் ஒருவன்.

பரஞ்சோதி அந்த இருட்டு அறைக் குள் எட்டிப் பார்த்தான். கொஞ்சம் வைக்கோலும் ஒரு கோரைப் பாயும் கிடந்தன. ஒரு மூலையில் சட்டியில் தண்ணீர் வைத்திருந்தது.

திரும்பித் தன்னுடன் வந்த காவ லர்களைப் பார்த்து, ''இது மடந் தானா ?'' என்று கேட்டான்.

''ஆமாம், தம்பி! உனக்கு என்ன சந்தேகம்?'' என்றான் காவலர்களில் ஒருவன்.

''இங்கிருக்க விருப்பம் இல்லாவிட் டால் வெளியே போய்விடு !'' என்றான் இன்னொருவன்.

பரஞ்சோதிக்கு இருந்த களைப்பில் எப்படியாவது இராத்திரி படுத்துத் தூங்க இடம் கிடைத்தால் போதும் என்று இருந்தது.

''இல்லை. இங்கேயே நான் படுத் திருக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு அறைக்குள் நுழைந்தான்.

அப்போது அவனை அழைத்து வந்த வர்களில் ஒருவன், ''தம்பி! இது மடந் தான். ஆனால், நாவுக்கரசர் மடமல்ல. மன்னர் மன்னரான மகேந்திர சக்கர வர்த்தியின் மடம்!'' என்று சொல்லிக் கொண்டே கதவைச் சாத்தினான்.

அடுத்த கணம் அறைக் கதவைப் பூட்டும் சத்தம் கேட்டது. (தொடரும்)

---

அடுத்த வாரம் : வண்ணப் படங்கள்
நாகநந்தி, ஆயனர்





# கீமத்

**'இது விலை போகுமா?'**

எந்தப் பொருளையும் இந்தக் கண்கொண்டு தயாரிப்பதுதான் உலக இயல்பு. அதிலும் திரையுலகம் இந்த அடிப்படையின் மீதுதான் நிற்கிறது. இல்லாவிட்டால் இத்தனை கடத்தல் கதைகள் அலுத்துப் போகுமளவுக்கு வெளிவந்திருக்குமா?

வைரக் கடத்தல், வெள்ளிக் கடத்தல் என்று எத்தனையோ கடத்தல் கதைகளைக் கடத்திக் கொண்டு வந்த திரையுலகம், இந்தப் படத்தில் பெண் கடத்தலுக்குப் பிராதான்யம் கொடுத்திருக்கிறதே என்றால் விலை போக வேண்டுமே என்ற கவலைதான் காரணமாயிருக்க வேண்டும்.

பெண்களைக் கடத்திச் சென்று, வெளிநாடுகளில் விற்றுப் பணம் பண்ணுகிறது ஒரு கும்பல். அதன் வலையில் விழுந்த நந்தாவை மீட்டு வரப் புறப்படுகிறாள் அவள் தங்கை சுதா.

நாட்டில் நடக்கும் இந்தக் கொடுமையைக் கண்காணித்துத் தக்க நடவடிக்கை எடுக்கத் துப்பறியும் துறை, கோபால் என்பவனை ஏவுகிறது.

சுதாவைத் தன் துப்பறிவுக்குப் பொருளாக்கிக் கொண்ட கோபால், கதையை வளர்க்கக் காதலை வளர்க்கிறான். காதலைக் கவலையுமேகோடு வளர்த்தால் விலை போகுமா? எனவே, கவர்ச்சியும் குழைத்துத் தரப்படுகிறது. இந்தக் கவர்ச்சியை வெளிப்படுத்த சுதாவாக வரும் ரேகா குடித்துப் போதையேற நடிக்கிறார்.

எதிரியின் பாசறையை அடைவதற்கு அடிதடி விறுவிறுப்பு ஊட்டுகிறது. அடைந்த பின்னோ விறுவிறுப்பு கூடுகிறது. சக்திமான் என்று பெயர் சூடிக் குழுவின் தலைவனாக வரும் பிரேம் சோப்ரா வேஷப் பொருத்தத்துடன் எந்தச் சூழ்ச்சியையும் கருவறுக்கும் வில்லனாகச் சக்கைப் போடு போடுகிறார். தர்மேந்திராவும் சிறிதும் பதற்றப் படாமல் தம் கதாநாயகப் பண்பைக் காட்டுகிறார்.

காதலர்கள் தப்பியோடுவதற்கு நிமிஷக் கணக்கில் கெடு தந்து, அதன் பின்னர் வேட்டை நாய்களையும் குதிரை வீரர்களையும் அவர்கள் மீது ஏவிவிடும் காட்சியைக் காணும்பொழுது, வில்லனுக்கே வெற்றி என்று சொல்லும் அளவுக்குத் திறம்படப் படமாக்கியிருக்கிறார்கள். சொல்லும் அளவுக்குத் தானே ஒழியக் கடைசியில் வெற்றி கதாநாயகனுக்குத்தான், கவலைப்படாதீர்கள்!

கவர்ச்சி ஆயிற்று, அடிதடி ஆயிற்று, அடுத்தது என்ன? நகைச்சுவைதானே? ஆகா, ராஜேந்திரநாத்தின் நகைச்சுவையையும் வழங்கியிருக்கிறார்கள், 'ஃபார்முலா' மாறாமல்!

விலை போகக்கூடிய படம்தான் என்றாலும், படத்தின் கீமத் — மதிப்பு உயரும் என்று சொல்வதற்கில்லை. எட்டோடு ஒன்பது என்ற கணக்குத்தான்! — ரா. வீ.



# எங்கோ, எதற்கோ கடத்தப் படுகிறேன்

டீன்ஏஜ் கதை

2

அவருக்கு வயது நாற்பது இருக்கலாம். பெயர் ராஜ்மோஹன். சுங்க இலாகாவில் உயர் அதிகாரி.

சுங்க இலாகாவின் மஞ்சள் நிறக் கட்டிடம். இனம் புரியாத 'த்ரில்' கலந்த, மௌனத்தைக் குலைக்கும் 'கூல்ஹோ'வின் ரீங்காரத்தை உமிழும் ஏர்-கண்டிஷனர்.

இடம் சென்னை. வெய்யில் கொளுத்தும் 'மே' மாத மாலை.

டெலிபோன் இப்போது தன் உயர்ந்த ஸ்தாயியில் அதிர்ந்து கரைய...

''ஹலோ!''

''நீங்கள் ராஜ்மோஹன்தானே?''

''ஆம்; நான்தான்; நான்தான்'' — ராஜ்மோகன்.

''........''

''நிஜமாகவா?''

''ஆம் சார்; நான் சொல்வது உண்மை; நிச்சயம் நடக்கவிருக்கும் உண்மை.''

''ஆமாம்; நீங்கள் யார்?''

''சர்க்காருக்கு வேண்டியவன்.''

ராஜ்மோகன் டெலிபோனை வைத்துவிட்டுச் சற்று யோசித்தார்.

''ராஜேந்த்!'' கூப்பிட்டார் ராஜ்மோகன்.

''மாலை வணக்கம், சார்.''

அவர் சிறிது நேரம் மௌனத்தில் கரைந்தார்.

அவர் வார்த்தைகளுக்காக நெருடிக் கொண்டிருக்கும்போது, என்னைப் பற்றிச்சொல்லி விடுகிறேன்.

என் பெயர் ராஜேந்த். அமெரிக்காவில் படிக்கும் போது 'டிரான்க்யுலைசர்' தயாரிக்கும் ஒரு கம்பெனிக்குச் சிரித்துச் சுழன்று ஒரு 'போஸ்' கொடுத்தேன். 'ஹெல்த் அண்ட் வெல்த்' பத்திரிகையில் அந்த விளம்பரம் இன்னமும், இதை நீங்கள் படித்துக் கொண்டிருக்கும் போது கூட வந்து கொண்டிருக்கிறது. சிறிது காலம், யு. எஸ். ஏ.வில் மேய்ந்து விட்டுத் திரும்பினேன். அதன் விளைவு சைக்கெடலிக் ஷர்ட், ஆர்மர் சூட், எலிஃபண்ட் பாட்ஸ், எட்டு செ. மீ. நீள சைட் பர்ன்ஸ்.... இத்தியாதி... இத்தியாதி...

இப்போது வயது இருபத்தெட்டு. கூர்மையான கண்கள், எடுப்பான நாசி, ஆண்களே பொறாமைப்படும் அடர்த்தியான புருவம் என்றெல்லாம் என்னை நானே வர்ணித்துக்






கொள்வது கிடையாது. ஏனெனில், எனக்குத் தற்பெருமை கிடையாது! கைச் சண்டை, ஜூடோ, கராத்தே எல்லாம் தெரியும். வீரசாகசங்களை விரும்பி வரவேற்பவன்.

கல்யாணம் — ம்ஹூம்! தனி — ஒற்றை — என்னைப்பற்றி நிறையவே சொல்லிவிட்டேன். மன்னிக்கவும்.

''ராஜேந்த்...! இன்று மாலை எனக்கு ஒரு ஃபோன் வந்தது. நம் ஆபீசில் கொஞ்ச காலம் பணியாற்றினரே, கைலாஷ் என்று, உனக்குத் தெரியாது?''

''தெரியாது சார். மேலே சொல்லுங்கள்.'' ஊக்கினேன்.

''அவருக்கு நாளை வைரம் வருகிறதாம், நாளை இரவு வரும் அமெரிக்கக் கப்பலில். ஒன்றரை லட்சரூபாய் இந்திய சர்க்காருக்கு நஷ்டத்தை ஏற்படுத்தப் போகிறார் அவர்!''

''ராஜ்மோகன் சார்! இந்தத் தகவல் உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?''

''அதுதான் சொன்னேனே! ஒரு ஃபோன் கால் வந்தது என்று!''

''அவருடைய விலாசம்...?''

ராஜ்மோகன் தம் மேஜையில் தேடினார்.

''ராஜேந்த்! குறித்துக்கொள்: 9, நியூ காலனி, தொலை பேசி 666806.''

''தேங்க்யூ சார்!''

''மேலே, உனக்கு மற்றுமொரு விவரம் தருகிறேன். அவர் பெண் பெயர் நிஷா.''

''நிஷா?''

''ஆம். நிஷா.''

அவர் மணியைப் பார்த்தார். ஏழு முப்பதாக முட்கள் அசைந்து கொண்டிருந்தன.

''நாளைக் காலை வா. நீதான் இதற்குப் பொறுப்பு. எச்சரிக்கை'' என்றார்.

அவரிடம் விடைபெற்றேன்.

**ப**ப்ளிக் டெலிபோன் பூத்தினுள் நுழைந்து முப்பது காசுகளை விட்டெறிந்தேன்.

''ஹலோ...''

''இஸ் இட் ட்ரிபிள் சிக்ஸ் எய்ட் நாட் சிக்ஸ்?''

''எஸ்!''

''மிஸ்டர் கைலாஷ்... ஜி.கைலாஷ் வீடா அது?''

''ஆம்.''

''மிஸ்டர் கைலாஷ் இருக்கிறாரா?''

''பேசுவது யார்?'' — ஓர் இருபது வயதுப் பெண் குரல். எங்கோ கேட்ட குரல் என்று என்னுடைய 'மெமரி பவர்' சொல்லிற்று. இவள் தான் நிஷாவா?

''அது அவ்வளவு முக்கியமில்லை. கைலாஷ் இருக்கிறாரா? அது முக்கியம்!''

''இல்லை, அவர்!''

''எங்கே போயிருக்கிறார்?''

''ரிஸ்கைரோ கிளப்பில் பார்க்கலாம். ஆமாம், நீங்கள் பேசுவது....?''

''தமிழ். தாங்க்யூ பேபி!''

நான் இந்தப் பெண் குரலை எங்கோ கேட்டிருக்கிறேன். எங்கே? புரியவில்லை. ம்ஹூம். யோசிக்க நேரமில்லை.

டெலிபோன் பூத்திலிருந்து வெளியே வந்தேன். ஓடினேன். சற்றுத் தள்ளி நிறுத்தியிருந்த என் அம்பாஸிடரை அடைந்தேன்.

இக்னிஷன் சாவியைத் தொட்டவுடன், துடித்துக் கிளம்பிய என் கார் சீறிச் சுழன்று, மூலைகளில் திரும்பிவிட்டது.

9, நியூ காலனி.

**'ஜீ**வன்' என்று கட்டம்கட்டித் தன் பெயரைச் சொல்லிக்கொண்ட பங்களா. காரைச் சற்றுத் தள்ளியே நிறுத்தினேன். விசாலமான பங்களா, சற்றுப் பசை அதிகமுள்ளவர்தான்.

வாசலில் இரண்டு கார்கள் நின்றிருந்தன. ஒன்று மெர்ஸிடிஸ் பென்ஸ். மற்றொன்று ஃபியட். சற்றுத் தூக்கலாக அமைந்திருந்த போர்ட்டிகோ. கார்கள் ஓடிச் சென்று நிற்க அமைந்த கான்க்ரீட் தளம். முன்புறத் தோட்டம். புஷ்பிக்கும் செடிகள்.

சிறிது தூரம் தள்ளிய இடத்தில் ஆற்று மணல் பரப்பிப் பூப்பந்துக்காக நின்ற இரு தூண்கள். மென்மையான நெட். சுற்று எல்லையை ஆழ்ந்த கோடாக வெட்டிய சிற்று.

இதையெல்லாம் கவனிக்க நேரமில்லை.

வாசலில் கூர்க்காவோ, நாய்களோ இல்லை; என் நல்ல காலம்!

நீட்டி நின்ற போர்ட்டிகோ நிழலுக்கு விரைந்தேன். வாசற் கதவு மூடி, உட்புறம் தாளிடப்பட்டிருந்தது. சுவரில் வெண்ணிற ஸ்விச்சில், சிவப்பு நிற மணி உருவம் செதுக்கப்பட்டிருந்தது.

தெரிந்த ஜன்னல்கள் எல்லாம் மூடிக் கிடந்தன. மெதுவாகச் சுற்றி வந்தேன். கான்கிரீட்டின் மேல் நடக்காமல், புல் தரையில் நடந்தேன்.

வீட்டின் மூலையைச் சுற்றித் திரும்பும் போது நின்று கவனித்தேன். சில தென்னங் கன்றுகள், இரைறு. அதிலிருந்து புறப்பட்டுக் கிளம்பும் குழாய், மாடியில் கான்கிரீட்டினால் ஆன ஓவர்சைஸ் தண்ணீர்த் சுவர். ஓர் அறை ஏர்-கண்டிஷனரின் வெளிப் பாகம் நீட்டியிருந்தது. என் ஊகம், அந்த அறைதான் கைலாஷின் அறையாயிருக்க வேண்டும் என்று சொல்லியது.

என்னுள் அமானுஷ்யமான பயம் பிறிட்டது. எதையோ தேடிக் கொண்டிருக்கிறேன். எதை?

குழாய்ச் சிலிண்டரைப் பிடித்து ஏறித் தண்ணீர்த் தொட்டிமேல் காலை வைத்தேன்.

என் திறமையை ஐந்து நிமிஷங்கள் சோதித்துப் பார்த்த கதவு பின் திறந்து கொண்டது.

ஒரே கும்மிருட்டு! சுவரில் தடவிச் சுவிச்சைத் தேடி விளக்கேற்றினேன். வெளிச்சம் வெளியில் பரவாது.

ஓர் அலமாரி தெரிந்தது. திறந்தேன். மேற்தட்டில் செய்தித் தாள்கள் தான் சிதறிக் கிடந்தன.

அறையை ஆராய்ந்தேன். ஏதாவது இரகசியக் கதவு தென்படுகிறதா என்று! ம்ஹூம்.

நான் வந்து பதினைந்து நிமிடங்கள் ஓடிவிட்டன. கடைசியாக மேஜை இழுப்பறையைத் திறந்தேன்.

அதில் ஒரு வெளி நாட்டுக் கவர் தலை நீட்டியது. சமீபத்தில்தான் அது வந்ததாக அதன் தேதி முத்திரை சொல்லிற்று. அது அமெரிக்க நாட்டினுடையது. அதைப் பிரித்தேன்.

''கை—

சரக்கு இருபதாம் தேதி இரவுக் கப்பலில் வருகிறது. ஒன்றரை ரூபாய். ரீஸ்கைரோ கிளப் ஜானெட் ராஜேஷிடம் கிடைக்கும். பத்திரம். நம்பர் F-22 1112 22'' —மோ.

யார் இந்த ஜானெட் ராஜேஷ்! யார் இந்த மோ! சைத்தான்களோ? சே!

குழப்பம், குழப்பம்; ஒரே குழப்பம்.

''ரீஸ்கைரோ நைட் கிளப்.''

நியான் விளக்குகள் சம்மதமான மௌனத்தில் சிரித்தன.

என் அம்பாஸிடரை ஒரு பூச்சியைப் போல் பார்த்தான் கூர்க்கா. வெளிநாட்டுக் கார்கள் வரிசையாகப் பல நின்றிருந்தன.

நவீன மோஸ்தர் கட்டிடம். இரவு ஒன்பது மணிக்குத் தேவையான சங்கதிகள் எல்லாம் கொண்டது.

உள்ளே நுழைந்ததும் எதிரே விஸ்தாரமான ஹால். அமானுஷ்யமான அமைதியைக் கிழித்துக் குதறும் ஜாக்பாக்ஸின் பாடல். ஹிப்பிகள் — இந்திய ஹிப்பிகள்— மேல்நாட்டு ஹிப்பிகள் — ஹிப்பிகளாகும் எண்ணம் கொண்டவர்கள் — அனைவரும் ஹாலில் சிதறியிருந்தனர்.

மாடிக்குச் செல்ல ஒரு படிக்கட்டு தெரிந்தது. மரப் படிகள். சின்னஞ் சிறுசுகளாக நீள அகலங்களில் தெரிந்தன. இரட்டை இரட்டையாகத் தாவி ஏறினேன்.

உள்ளே மாடியில் பலர் கும்பலாக அமர்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தனர்.

கண்களால் தேடினேன். கைலாஷ் ஓர் ஓரத்தில் ஆடிக் கொண்டிருந்தார். அவர் பார்ட்னர் யார்? ஜானெட் ராஜேஷ் அவர் தானா? சிறிய உதறல் என் இரத்தநாளங்களில் வெடித்துப் புறப்பட்டது.

''பையா! நீ யார்?'' என்றார்.

நான் சீரியஸாக என் முகத்தை வைத்துக் கொண்டு, ''மன்னியுங்கள் சார். நீங்கள் தானே கைலாஷ்?'' என்றேன்.

''இல்லையில்லை. நான் ராஜேஷ். இவர் தான் கைலாஷ்.''

''மிஸ்டர் கைலாஷ்! ஐ ஆம் ஸாரி. நான் இதைச் சொல்ல வேண்டியிருக்கிறது. இதைச் சொல்லுவதற்காக வருந்துகிறேன். உங்கள் பெண் யாராலோ, எதற்கோ, எங்கோ கடத்தப்பட்டிருக்கிறாள். உங்கள் வீட்டுக்குச் சென்றேன். நீங்கள் இங்கு இருப்பதாக அறிந்த தகவலில் ..... மன்னிக்கவும் .... இந்தாருங்கள்.''

''அவசரம்! இதைப் பார்ப்பவர் யாராயினும் ஜி. கைலாஷ், 9, நியூ காலனி 666806 தொடர்பு கொள்ளவும்.

விஷயம்: நிஷா (நான் — அவர் பெண்) எங்கோ, எதற்கோ கடத்தப் படுகிறேன்.''

அவசரத்தில் கிறுக்கப்பட்டிருந்தது.

தொடர்ந்தேன்: ''ஆமாம், சார். நான் லஸ் சர்ச் ரோட்டில் இந்தச் சீட்டைக் கண்டெடுத்தேன். மயிலாப்பூர் போலீஸ் ஸ்டேஷனில் புகார் செய்திருக்கிறேன்.''

ராஜேஷ், கைலாஷிடம் எதுவோ தந்தார்.

கைலாஷை இழுத்துக் கொண்டு, மாடிப் படிகளில் இறங்கி, என் காரை நோக்கி ஓடினேன்.

'கைலாஷ்! என்னிடம் வசமாகச் சிக்கிக் கொண்டீர்கள்! வாருங்கள், வாருங்கள்!'

காரின் கதவைத் திறக்கும் சமயம்...

அவர் என் கையை விலக்கிக் கொண்டு ஓடினார். நான் அவரைத் தொடர்ந்து ஓடினேன். ஒரு பப்ளிக் டெலிபோன் பூத்தினுள் நுழைந்து, ஏதோ வார்த்தையாடினார்.

''பையா! யாரிடம் ரீல் விடுகிறாய்? இப்போது நான் யாருடன் பேசினேன் தெரியுமா? என் மகள் நிஷாவுடன் பேசினேன். அவள் வீட்டில்தான் இருக்கிறாள். நீ யார்? உண்மையைச் சொல்!''

நான் பதில் சொல்லாமல் அவர் முகத்தில் என் கைக்குட்டையை வீசி உதறினேன். அவர் உடனே மயக்கமாகி விட்டார். அவரை என் மீது தாங்கிய வண்ணம் காருக்கு அழைத்துச் சென்றேன்.

என் அறைக்கு வந்து சேர்ந்ததும் ஒரு நிம்மதி. கைலாஷ் இன்னும் மயக்கத்திலிருந்தார். அவரைப் படுக்க வைத்துவிட்டுப் பரிசோதித்தேன். அவரிடம் ஒரு வரைபடம் இருந்தது. சென்னை நகரின் வரைபடம். 1:100 என்ற விகிதத்திலானது. கடற்கரையைக் குறிக்க நீள நீலக் கோடுகள் தென்

# பொன்மலர் மேனிக்கு மென்மணம் சந்தனம்!

முழுமையான தூய மைசூர் சந்தனம், வெளிநாட்டு வாசனை திரவியங்கள், பலவித இயற்கை மூலிகைகள் இவை-யனைத்தையும் ஒருங்கே கொண்டு, பிரத்தியேகமான 'மைக்ரோஃபைன்' முறையிலே தயாரிக்கப்படுவது **கோகுல் ஸான்டால் டாய்லெட் பவுடர்.** கோடையைக் குளுமையாக்க, காலையும், மாலையும், எப்பொழுதும், புத்துணர்ச்சி-யுடன் திகழ, உங்கள் மேனி முழுமையும் **கோகுல் ஸான்டால் டாய்லெட்** பவுடரைத் தூவுங்கள், சந்தன மண உலகிலே சஞ்சரியுங்கள்!

# கோகுல்

ஸான்டால் டாய்லெட் பவுடர்

**டி.எஸ்.ஆர் & கம்பெனி, மதராஸ்**

பிரத்தியேக தயாரிப்பு

*கோகுல் நறுமணம் சூழட்டும்*
*உங்கள் வாழ்வு கமழட்டும்!*

**டி.எஸ்.ஆர் & கம்பெனி, மதராஸ்**
ராமாவரம், மதராஸ் 600089




ADWAVE-TSR 19 TAM

பட்டன. ஒரு புள்ளியில் ஒரு மார்க் செய்யப்பட்டிருந்தது. அது எதைக் குறிக்கிறது என்பதை மிகச் சுலபமாகப் புரிந்துகொண்டேன். மீண்டும் அவரைச் சோதனையிட்டேன். ஒரு சிறிய மணிபர்ஸ். ஆண் வாடை வீசும் பர்ஸ். ஜி. கைலாஷ் என்று சொல்லிக் கொள்ளும் விசிட்டிங் கார்டு. சில ரூபாய் நோட்டுக்கள். தனியாக ஒற்றையாக ஒரு ரூபாய் நோட்டு.

அதில் ஒரு நம்பர். என் கண்ணை உறுத்தியது. ஆம். அந்த நம்பர் அந்த அயல் நாட்டு உறையில் எழுதியிருந்த அதே நம்பர்தான். F-22111222.

மணி பத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

ராஜ்மோகனுக்கு டெலிபோன் செய்தேன். என்னுடைய சாகசங்களை அவரிடம் சொல்லி, அவரது மேலான ஆலோசனையை விரும்பிக் காத்திருந்தேன்.

''ராஜேந்த்! அந்த வரைபடம் புரிகிறதல்லவா?''

''புரிகிறது, சாப்.''

''ஆம். அது உனக்குப் புரிந்திருக்கும். அது அரிச்சுவடி. ஏ. பி. ஸி. டி.''

''......''

''அந்த ரூபாய் நோட்டு?''

''நான் போய்க் கேட்டாலும் சரக்கைக்..''

''கொடுத்துத்தான் ஆக வேண்டும், ராஜேந்த்! புத்திசாலித்தனமாய்க் கேட்கிறாய். இந்த வழியில் போனால் இந்தக் கேஸ் க்ளியர் ஆகிவிடும். மீதியை நாளைக்குக் கவனிக்கலாம். சமர்த்தாகத் தூங்கு. பை!''

எனக்குச் சுவாரசியமாய்த் தூக்கம் வந்தது.

இரவு நடக்கப் போகும் 'அட்வென்சர்'களை வரவேற்றுப் பாடும் இளங்காலை; ஏழரை மணிக் காலை.

கைலாஷ் இன்னும் மயக்கத்தில் இருந்தார். லுங்கி கட்டிக் கொண்டு என் அம்பாஸிடர் காரைத் துடைத்துக் கொண்டிருந்தேன்.

ஒரு பெண், இளம் பெண். அழகான நிறத்தில், அழகான உடையில் என்னை நோக்கித் தன் காரைக் கொண்டு வந்து நிறுத்தி, என்னைச் சந்திக்க இறங்கி...

என்ன ஆச்சரியம்! இவள் சுநீத் இல்லே?!

''ஓ, சுநீத்!''

''ராஜேந்திரன், வாட் எ சர்ப்ரைஸ்! நீயா?''

என் இரத்த நாளங்களில் ஏதோ ஓர் இனம் புரியாத 'த்ரில்' கலந்த உந்தல்.

நான் அமெரிக்காவில் படித்தபோது எனக்கு இரண்டாண்டுகள் ஜூனியராக என்னுடன் படித்தவள் இந்த சுநீத். நாங்கள் ஒருவரை யொருவர் அறியோம். எங்களுக்குள் 'இது' ஏற்பட்டது. ஓர் அழகான புஷ்பம் மென்மையாக விரிந்த அனுபவம்.

* * *

ஒரு நாள் மாலை. அவசரமாக ராஜேந்திரன் ஒரு பிரமுகரைச் சந்திக்கச் சென்றுகொண்டிருந்தான். போன வேகத்தில் ஒரு பெண்ணின் காலை மிதித்துவிட்டான். ''ஸாரி'' என்று சொல்லிக் கொண்டே வேகமாகச் சென்றான். அந்தப் பெண் அதிருப்தியுடன் முணுமுணுத்தது அவன் காதில் விழுந்தது. அதற்கு முக்கிய காரணம் அது தமிழா




யிருந்ததுதான். ராஜேந்திரன் திரும்ப அவளிடம் ஓடிவந்தான்.

''என்ன சொன்னீர்கள்? திரும்பச் சொல்லுங்கள்'' என்றான் அவளிடம்.

''நீங்கள் மதராஸியா?'' என்றாள் அவள் தன் கால் வலியை மறந்தவளாய்.

''ஆமாம். இங்குதான் யுனிவர்ஸிடியில் படிக்கிறேன். உங்கள் காலை மிதித்ததற்காக உண்மையிலேயே வருந்துகிறேன்.''

''பரவாயில்லே. நான் சுநீத். ஆச்சரியம்! நானும் இங்குதான் படிக்கிறேன்.''

பிறகு நடந்த பரஸ்பர விசாரிப்பில், அவர்களுக்கிடையே இரண்டு வயது வித்தியாசம் என்றறிந்தனர். பரம்பரையான கிராமச் செல்வத்தால் பெற்றோருக்குப் பின் எஸ்டேட் முழுவதையும் மானேஜரிடம் ஒப்படைத்துவிட்டு வாழ்க்கையை நுகரவும், வாழ்க்கையைப் படிக்கவும் அமெரிக்கா வந்த இளைஞன் அவன் என்று அவள் அறிந்து கொண்டாள். அவள் ஸ்காலர்ஷிப் தந்த ஊக்கத்தினால் படிக்க வந்திருக்கிறாள் என்பதை அவன் தெரிந்து கொண்டான்.

சந்திப்புக்கள் தொடர்ந்தன.

அவன் அழகன்; இளைஞன்; தமிழன்.

அவள் அழகி; இளைஞி; தமிழ்ப் பெண்ணும் கூட.

அப்புறம் என்ன? அவர்கள் ஒருமையில் விளித்துக் கொள்ள ஆரம்பித்ததையும், ஸ்தூலமான காதலில் விழுந்ததையும் உங்களுக்குச் சொல்லத் தேவையில்லை.

அவள் அந்தகாரமான அந்த மௌனத்தைக் கலைத்தாள்.

''ஹனி! நீ ஏன் என்னிடம் சொல்லாமல் இந்தியாவுக்கு வந்துவிட்டாய்?''

''இல்லே, பேபி! என் எஸ்டேட்டில் ஏதோ தகராறு. அவசரமாக வரும்படி மானேஜர் கம்பி வழியாகச் சொன்னார். நீ எங்கோ சுற்றுலாப் போயிருந்ததால் உன்னிடம் சொல்ல முடியவில்லே. ஆமாம், உனக்குப் போட்ட கடிதங்களுக்கு ஏன் உன்னிடமிருந்து பதில் இல்லே?''

''இல்லே, ஹனி. நானும் உன்னைத் தேடி இந்தியா வந்து விட்டதால் உன் கடிதங்களை நான் பார்ப்பதற்குச் சந்தர்ப்பமே இல்லே. மெட்ராஸில் உன்னைத் தேடாத இடமில்லே.''

அந்த விநாடியில் அவள் முகத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டதை உணர்ந்தேன். அவ

வின் மாறுதலான முறைப்புக்குக் காரணம் என்ன?

"ராஜேந்திரன், நீ என்ன ஜேம்ஸ் ஹாட்லியின் மகனா?"

"இல்லை. அவரது தாத்தா."

"கிடக்கட்டும். நேற்று ஒரு விநோதமான சம்பவம், இல்லை. அனுபவம் ஏற்பட்டது. என்னுடைய தந்தை வீட்டில் இருக்கிறாரா என்ற மர்ம போன் குரலைத் தொடர்ந்து, என் தந்தையின் அறையில் யாரோ புகுந்து— ஆச்சரியம் — ஒன்றும் போகவில்லை. ஆனால் புகுந்த ஆளினுடைய 'சன்ஷைன்' பர்ஸ் விழுந்து கிடந்தது. அந்த ஆள் ஒன்றையும் தொடவில்லை. ஆனால் எதையோ எதிர் பார்த்திருக்கிறார். இந்தியாவில் உன் பெயர் ராஜேந்தரா — அந்த ஆள் நீயே என்று இப்போது உணர்ந்திருப்பதால் உன்னை மரியாதையில் விளிக்கிறேன். ஏன் ராஜேந்த்! நீ இப்படிச் செய்தாய்?"

எனக்குப் பேச வாய் வரவில்லை. கைலாஷின் ஒரே மகள் நிஷாவா இவள்? சுநீத் இல்லையா? அமெரிக்காவில் ராஜேந்திரன், இந்தியாவில் ராஜேந்த் ஆனது போல், சுநீத் ஏன் நிஷா ஆகக் கூடாது?

"என்னை மன்னித்துவிடு நிஷா! கையில் ஒற்றை ரோஜாவுடன் 'ஐ லவ்யூ' என்று உன் கன்னத்தில் இழைய வேண்டுமா, சொல்!"

அவள் யோசித்துப் பின் பேசினாள்.

"ராஜேந்த், கேள். நீ கஸ்டம்ஸில் இருக்கிறாய். யு. எஸ். ஏ. யில் இருந்து வரும் விசுவ பாரதியில் என் அப்பாவுக்கு ஒன்றரை லட்ச ரூபாய் பெறுமானமுள்ள வைரம் வருகிறது என்று உன் பாஸுக்கு நேற்று ஓர் அனாமதேயப் போன் வந்த காரணத்தால் நீ இந்தக் கேஸில் ஈடுபட்டிருக்கிறாய். அதனால் நேற்று எனக்கு போன் செய்து அப்பா இருக்கிறாரா என விசாரிக்கையில் 'பேபி' என்ற வார்த்தைப் பிரயோகத்தை உபயோகித்து, உன்னை எனக்குக் காட்டிக் கொண்டாய். அப்புறம் அப்பாவின் ஏ. ஸி. அறையில் சோதனை செய்தாய். இவ்வளவு கஷ்டப்பட்டதற்குப் பதிலாக நீ என்-அதாவது கைலாஷின் மகளின் உதவியை நாடியிருக்கலாம். ஏனெனில் கஸ்டம்ஸுக்குத் தகவல் சொன்னதே நான்தான். ஆம்! என் உடலில் பாசத்தை விடத் தேச பக்திக்கே நிறைய இடம்."

நான் சற்றுத் திகைப்பில் ஆழ்ந்தேன். பேசாமல் அவளை உள்ளே அழைத்துச் சென்றேன்.

"ராஜேந்த்! என் தந்தை நேற்று வீட்டுக்கு வரவில்லை. உனக்குத் தெரியும் அவர் எங்கே என்று. ப்ளீஸ், சொல்லிவிடு ராஜேந்த்."

அவளது அகன்ற கண்களில் பளபளத்த கண்ணீர்த் துளிகள் என்னை என்னவோ செய்தன. மயக்கமாக இருக்கும் கைலாஷை அவளுக்குக் காட்டினேன்.

ஒரு புஷ்பம் மெல்ல விரிவது போல் அவள் முகம் மலர்ந்தது. "ராஜேந்த், என் தந்தை இன்று முழுவதும் மயக்கத்தில் இருப்பாரா?"

"ஆம், பேபி!"

அவள் அப்புறமாகச் சந்திப்பதாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டாள்.

நான் வெளியே போய்விட்டு வீடு திரும்பியபோது மாலை மணி ஆறரை இருக்கும்.

நான் என் அறைக்குள் நுழைந்ததும், கைலாஷ் அங்கு இல்லை. நான் அவரிடமிருந்து எடுத்திருந்த அந்தக்குறிப்பிட்ட ரூபாய் நோட்டும், வரைபடமும் கூட மறைந்திருந்தன.

உடனே எனக்கு நிஷாவின் ஞாபகம்தான் வந்தது. அவளுக்குப் போன் செய்தேன்.

"நிஷா! நீ இப்போது செய்தது மிகவும் தவறான செயல். இதற்காக நீ வருந்தப் போகிறாய். நான் காரியத்தை எவ்வளவு சுலபமாக்கியிருந்தேன். நடுவில் நீ கெடுத்து விட்டாய்" என்றேன்.

அவள் சாவகாசமாக, "என்ன உளறுகிறாய்?" என்று துக்கம் விசாரித்தாள்.

"உன் தந்தையை ஏன் விடுவித்தாய்?" என்று நேராகவே வினவினேன்.

"என் தந்தையையா? என்ன உளறுகிறாய்? உன் பொறுப்பிலல்லவா இருந்தார்?"

எனக்கு அவள் உண்மை பேசுபவளாகவே அந்தக் கணத்தில் தோன்றியது. அவளுடன் பேசி அதை உறுதி செய்து கொண்டு சோர்வுடன் அமர்ந்தேன்.

அப்போதுதான் ஆச்சரியகரமான அந்தப் போன் குரல் ஒலித்தது. "நீ ராஜேந்த் தானே?" — எங்கோ கேட்ட குரல்.

"நீ யார்?" — நான்.

"குரங்கே, கேள்! கைலாஷ் என் பொறுப்பில்தான் இருக்கிறார். புரிந்ததா? இந்தக் கேஸில் நீ அதிகமாக ஈடுபடுகிறாய். உன் தந்தைக்கு நீ ஒரே பிள்ளை, ஜாக்கிரதை!

## கர்ப்ப ரக்ஷகிக்குக் கும்பாபிஷேகம்

மங்கையராகப் பிறப்பதற்கு நல்ல மாதவம் செய்ய வேணும் என்பார்கள். அந்த மங்கை கருவுற்றபோது காத்து ரட்சிக்கும் அன்னையை மனமுருகி வேண்டாமல் இருக்க முடியுமா? தஞ்சை மாவட்டம் திருக்கருகாவூர் ஸ்தலத்தில் கர்ப்பரக்ஷகித் தாய் கொலுவிருக்கும் கோயிலுக்கு செப்டம்பர் 9ந் தேதி மகாகும்பாபிஷேகம் நடத்தவிருக்கிறார்கள். பதினேழு வருஷங்களுக்குப் பிறகு நடக்கவிருக்கும் இந்தக் கும்பாபிஷேகத்தில் பக்தர்கள் திரளாகக் கலந்து கொள்வதோடு, திரவிய சகாயம் செய்து கும்பாபிஷேகத்தை நிறைவு செய்ய வேணும். திருப்பணிக்குப் பொருளுதவி செய்ய விரும்பும் பக்தர்கள், முல்லைவனநாதர் திருப்பணிக் கமிட்டி, திருக்கருகாவூர், தஞ்சை மாவட்டம் என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

# ஆண்டுதோறும்
# புகழின் வளர்ச்சி
# உங்கள் ஆதரவினால்தான்

## லிப்டன்
## ரூபி டஸ்ட்




ஒவ்வொரு பாக்கெட்டுக்கும்
அதிகக்கோப்பைகள் தருவதாலேயே
மக்களின் உள்ளங்கனிந்த
பாராட்டுகளைப் பெறுகிறது

பாக்கிங் செய்த தேயிலை மட்டுமே புதிதாகவும், மணத்துடனும் திகழ்கிறது

LRDC-RA/77 TAM



"உங்களுடைய பலம் எது?"

"என் மக்களுடைய அன்பு!"

"உங்களுடைய பலவீனம் எது?"

"நான் என் மக்களை அதிகமாக நேசிப்பது!"

முஜிபுர் ரஹிமான் ஒரு பேட்டியில் கூறியது

டைம்ஸ் — பாலி

---

ஒரு கூட்டத்தில் மந்திரியொருவர் சொற்பொழிவு நிகழ்த்தும்போது கூறினர்:



விலைவாசியைச் சமாளிக்க ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.

ஒரு குரல்: என்ன அது?

மந்திரி: அதிகமாகப் பணம் சம்பாதிப்பதுதான்!

ஒரு குரல்: அதிகமாகப் பணம் சம்பாதிக்கவும் ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.

மந்திரி: என்ன அது?

ஒரு குரல்: மந்திரியாவதுதான்!

— கே. வி. முரளி

இன்று இரவு ஏதாவது உன் குரங்குத்தனத்தைக் காட்டினுல், நீ தீர்ந்தாய்!''

எனக்கு அட்வைஸ்! என் அப்பாவுக்கு நான் ஒரே பிள்ளை!

பயங்கரமான அட்வைஸ்!

அந்தக் குரல் எனக்கு ஜானெட் ராஜேஷைத்தான் நினைவுக்குக் கொண்டு வந்தது.

நான் இளைஞனைதினுல் என் உடலில் சிறிதும் பய உணர்ச்சியே ஏற்படவில்லை.

ராஜ்மோகனைப் பார்க்கச் சென்றேன். அவரிடம் இதைப் பற்றிச் சொன்னேன்.

''ராஜேந்த்! கேள். இந்தக் கேஸில் அவர்கள் எப்படிச் செயல்படுவார்கள் என்பதை ஆராய வேண்டும். நான்கூட முதலில் இந்த ஃபோன் குரலை அவ்வளவு முக்கியமாகக் கருதவில்லை. ஆனுல் உன் அட்வென்ச்சர்களின் தொடர்ச்சியினுல் நிச்சயம் ஏதோ நடக்கப் போகிறது என உணர்ந்தேன். இத் தகவல் நமக்கு முன்னமே கிடைத்திருந்தால் பம்பாய் ஹார்பரில் சோதனை நடத்தச் சொல்லியிருக்கலாம்.'' சற்றே நிறுத்திச் சிகார் சாம்பலை உதிர்த்தபின் தொடர்ந்தார்:

'' அது எப்படியோ இருக்கட்டும்! ஒன்றரை லட்சம் ரூபாய் வைரம் ஒன்றும் விளையாட்டல்ல! இதை நிச்சயம் இந்தச் சைத்தான்களின் கும்பல் பெற முயலாமல் இருக்கமாட்டார்கள். ஆனுல் எந்த இடத்தில் முயற்சி செய்வார்கள் எனத் தெரியவில்லை. சென்னை மகாபலிபுரச் சாலையில், சென்னையிலிருந்து எட்டாவது கிலோமீட்டரில் என்பது அவர்களின் பழைய திட்டம். அவர்கள் திட்டத்தை எப்படி மாற்றப் போகிறார்கள் என்று நீ அவர்களைத் தொடர்ந்து கண்காணித்துக் கண்டுபிடித்துச் சொல்! நானும் இந்தக் கேஸில் ஈடுபடப் போகிறேன். பதினெரு மணிக்கு நான் நமது ஆட்களுடன் தயாராக மகாபலிபுரத்துச் சாலையில் ஒதுக்கமாக — உனக்குத் தெரிந்திருக்குமே — சவுக்குத் தோப்புக்கள் — அந்த இடத்தில் காத்திருக்கிறேன். இந்த டிரான்ஸ்மிட்டர் மூலம் தொடர்பு கொள்!'' என்று சொல்லி 'அஷ்வானி' டிரான்ஸ்மிட்டரைக் (மேட் இன் ஜப்பான்) கொடுத்தார்.

ராஜ்மோகனிடம் நான் விடைபெற்றேன்.

எட்டு முப்பது மணியாகி யிருந்தது. என் கடிகாரத்தின் ரேடியம் கொண்ட முட்களின் மேய்ச்சல், என் மன உளைச்சலுக்கு முன் நிற்கத் திராணியின்றி ஒதுங்கியது.

என் அம்பாஸிடரைக் கிளப்பி, விரைவாக, நில்கைரோ கிளப்புக்கு விரைந்தேன்.

என் அம்பாஸிடரை ஒதுக்குப்புறமாக நிறுத்திக் கண்ணுடிகளை ஏற்றிப் பூட்டிச் சாவியைப் பத்திரமாக வைத்துக் கொண்டேன்.

கீழேயும் சரி, மாடியிலேயும் சரி ராஜேஷ், கைலாஷ் இருவரையும் காண முடியவில்லை.

சற்றுக் கூடுதலாக 'டிப்ஸ்' கொடுத்து சர்வர் — சற்றுச் சின்னப் பையன் — ஜானெட் ராஜேஷ் வீடு எங்கே இருக்கிறது என அறிந்து கொண்டேன்.

பூனைபோல் அவர்கள் வீட்டை அடைந்தவன், அவர்கள் இருக்கும் இடத்தையும் அடைந்து, அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைக் கவனமாகக் கேட்டேன். பிறகு அங்கிருந்து சர்வ ஜாக்கிரதையாக வெளியேறி ராஜ்மோகனிடம் கைலாஷின் புதிய திட்டத்தைச் சொன்னேன். உடனே இருவரும் கடற்கரைக்கு விரைந்தோம். தங்கள் புதிய திட்டப்படி கைலாஷ் ராஜேஷ் இருவரும் படகில் ஏறி வேகமாகச் சென்றனர். நானும் ராஜ்மோகனும் உடனே இன்னொரு படகில் அவர்களைத் துரிதமாகத் தொடர்ந்து சென்று அந்தப் படகை மடக்கினோம். கடுமையான துப்பாக்கிச் சண்டை நடந்தது. அந்தச் சண்டையில் ராஜேஷ் இறந்து விட்டார். ஆனுல் கைலாஷ் அந்தக் கடத்தல் வைரப் பெட்டியுடன் கடலில் குதித்து நீந்திக் கரை ஏறி, ஜீப்பில் ஏறிப் பறந்தார். ராஜ்மோகனும், நானும் எங்கள் காரில் ஏறி அந்த ஜீப்பைத் துரத்தினோம். அதிவேகமாகப் பறந்த ஜீப் விபத்துக்குள்ளாகிக் கைலாஷ் இறந்துவிட்டார். எனக்கும் ராஜ்மோகனுக்கும் வெற்றிதான்.

''ஐயோ, என் தந்தை போய்விட்டாரே. இனி எனக்கு ஒருவரும் இல்லையே!'' என்று நிஷா கதறினுள்.

''நான் இருக்கிறேன், நிஷா!'' என்று கூறி ஆதரவாக அவள் தளிர்க் கரங்களைப் பற்றினேன்.

என் பேபி! பற்றிய கரங்களை விடுவேனு என்ன?' ம்ஹூம்!







உன் அனுமதியுடனும் போலீஸ் பாதுகாப்புடனும்தான் படம் எடுத்தேன்.
























# கெட்ட பெயர்

வனமாலிகை

"அம்மா!" — குரல் கொடுத்தான் சிங்காரம்.

"ம்.... உள்ளே வா!" என்றாள் சிவகாமி.

சிங்காரம் உள்ளே நுழைந்ததும், தான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை மூடி மேஜையின்மேல் வைத்தாள்.

மேல் துண்டால் தரையைத் தட்டிவிட்டு அவள் எதிரே தரையில் உட்கார்ந்து கொண்டான் சிங்காரம்.

"ஐயா ஆபீசிலே இருக்காங்களா? வெளியே போயிட்டாங்களா?"

"வெளியே போயிட்டு வந்துட்டாங்க."

வியர்வையால் நனைந்திருந்த முகத்தையும் கழுத்தையும் அழுத்தமாக மேல் துண்டால் துடைத்துக் கொண்டான்.

"ஒரு டம்ளர் மோர் குடியேன்."

"சரியம்மா."

சிவகாமி உட்பக்கம் பார்த்து, "அப்புக்குட்டா!" என்று அழைத்தாள்.

சமையல்காரன் அப்புக்குட்டன் வந்தான்.

"சமையல் ஆயிடுத்தா? சிங்காரத்துக்கு ஒரு டம்ளர் மோர் கொண்டு வா."

"பத்து நிமிஷத்திலே தயார் ஆயிடும்." அவன் மலையாளியானாலும் சுத்தமாகத் தமிழ் பேசுவான்; சுவையாகச் சமைப்பான்.

"அப்பு, உப்பு ஜாஸ்தியாப் போட்டுவிடாதே!"

சிவகாமியின் கணவர் ராமாமிருதம் சிவகாமி அண்ட் கோவின் உரிமையாளர். ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம். பல ஆட்கள் வேலை செய்யும் நிறுவனம்.

"புது சமாசாரம் ஏதாவது உண்டா?" என்று கேட்டாள் சிவகாமி.

"ஐயாவைப் பத்தி என்னம்மா சொல்றது? வழக்கமான கதைதான். நேத்து சாயங்காலம் மூணு மணிக்கு எவனோ பம்பாய்க்காரன் வந்திருந்தான். ஐயா அறையே 'பார்' ஆயிடுச்சு."

சிவகாமி பெருமூச்சு விட்டுக் கொண்டாள்.

ராமாமிருதம் தங்கமானவர். அவரிடமுள்ள கெட்ட குணம் குடிப்பதுதான். மதுவிலக்குக் காலத்தில் கூட அவர் நாள் தவறாமல் குடித்துக் கொண்டிருந்தார். உயர்ந்த சரக்குகள்தான் வேண்டுமென்பதில்லை. பட்டைச் சாராயம் கிடைத்தாலும் போதும். மதுவிலக்கு அமுலில் இருந்த காலத்தில் சிங்காரத்தின் உறவினன் ஒருவன் தினமும் அவருக்குத் தேவையான பட்டைச் சாராயத்தைக் கார் ஷெட்டில் வைத்துவிடுவான். அதற்கென ஒரு கள்ளிப் பெட்டி கார் ஷெட்டில் வைக்கப்பட்டிருந்தது. ஒரு சாவி ராமாமிர்தத்திடமும் மற்றொரு சாவி அவனிடமும் இருக்கும்.

இதெல்லாம் சிவகாமிக்கும் தெரியும். ஆரம்பத்தில் அழுது புரண்டு பார்த்தாள். அவர் கேட்க வேண்டுமே? அவள் நல்ல குடும்பத்தில் பிறந்தவள். அவர் குடிப்பது தன்னைத் தவிர, பிறருக்குத் தெரிந்துவிடக் கூடாது என்று காப்பாற்றி வந்தாள்.

ராமாமிருதம் குடிப்பதை நிறுத்தத் தவம் பண்ணுவதைத் தவிர வேறு வழியில்லை.

அவர்களுக்கு ஒரு பெண், ஒரு பிள்ளை.

பெண்ணை டில்லியில் ஐ. ஏ. எஸ். அதிகாரிக்குக் கொடுத்து விட்டார்கள். பையன் இன்ஜினியரிங் படிக்கிறான். பட்டம் பெற்றதும் அவனை வெளிநாட்டுக்கு மேற் படிப்புக்காக அனுப்பத் திட்டம் போட்டிருக்கிறார்கள்.

ராமாமிர்தம் 'தண்ணி' போட்டு ஓவராகி விட்டால், அவர் கம்பெனியில் வேலை பார்க்கும் பெண்கள் யாரும் அனுமதியின்றி அவர் அறைக்குள் போகக் கூடாது. அவர் எந்தப் பெண்ணிடமும் தகாத முறையில் நடந்து



கொண்டது கிடையாது. சிவகாமியைத் தவிர அவர் வேறு பெண்ணைத் தீண்டிய தில்லை — மனத்தளவில்கூட நினைத்ததில்லை. அவ்வளவு சுத்தமானவர்.

ஆனால் பாழாய்ப் போன குடி அவரை அடிமையாக்கிக் கொண்டது.

உடல்நிலை சரியில்லாமல் அவரை ஆஸ் பத்திரியில் சேர்த்திருந்தார்கள்.

டாக்டர் பரிசோதனை செய்துவிட்டு, ''சார்! நீங்கள் குடிப்பதை அடியோடு விட்டு விடவேண்டும்'' என்றார்.

''டாக்டர்! அது என்னால் முடியாது. என் மனைவி வடித்த கண்ணீருக்கு இல்லாத சக்தி அது — என் மனைவியின் கண்ணீரை விட எனக்கு உயிர் பெரிதில்லை!''

''அப்படியானால் ஒருமுறை மட்டும் அள வாகச் சாப்பிடுங்கள்.''

''முயற்சி செய்கிறேன்'' என்றாரே தவிர சரி என்று சொல்லவில்லை.

ராமாமிர்தமும் எவ்வளவோ தடவைகள் முயற்சி செய்து தோற்று விட்டார். காலையில் அளவாகப் போட்டுவிட்டு முதலாளி ஆசனத் தில் அமர்ந்தால் காரியங்கள் மளமளவென்று நடக்கும். கடிதங்களையும் கச்சிதமாக டிக் டேட் செய்வார். அவரது பாஷை நயத்திலும் சொல் திறனிலும் எதிராளியைத் தம் வசப் படுத்திவிடுவார்.

மதுவிலக்குத் தளர்த்தப்பட்ட பிறகு அவ ருக்குச் சட்டத்தைக் கண்டு பயப்படத் தேவை யில்லை.

இரவு ஒன்பது மணிக்கு அவர் வீடு திரும்பி விடுவார் 'நார்மலாக' இருந்தால். இல்லையானால் எப்போது வருவார் என்று சொல்ல முடியாது. அவர் வருகிறவரைக்கும் முன்பக்கம் விளக்கைப் போட்டுக் கொண்டு விழித்திருப்பாள் சிவகாமி.

சிவகாமி குழந்தையாக இருந்தபோது....

அவள் வீட்டுத் தோட்டக்காரன் அவளை எடுத்து வைத்துக் கொண்டான்.

''ஏய், ஒரே நாற்றமா இருக்கு. என்னைக் கீழே விடு'' என்பாள் சிவகாமி.

''சும்மா இருங்கம்மா!''

குழந்தைக்கு வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது. அவனிடமிருந்து விடுபடக் குழந்தை திணறியும் அவன் விடவில்லை. சிறு மிக்கு வாந்தி எடுத்து விட்டது.

சிவகாமியின் அப்பா ஓடி வந்தார்.

''குழந்தை வாந்தியா எடுக்கிறான்?''

''ஆமாங்க, எசமான்!''

''அப்பா! இவன்கிட்டப் பேசாதீங்க—ஒரே நாற்றமா இருக்கு... எனக்கு வாந்தி வந்துட்டது, அப்பா.''

தோட்டக்காரன் நிறைய பட்டைச் சாராயத்தைக் குடித்திருந்தான். அதன் நாற்றம் குழந்தைக்குப் பிடிக்கவில்லை.

குழந்தையின் அப்பா அவன் கன்னத்தில் பளார் என்று அறைந்து விட்டார்.

''சீ... ராஸ்கல், போடா வெளியே! குடித்துவிட்டா வருகிறாய்? நீ வேலைக்கே வேண்டாம்'' என்று கூறித் துரத்திவிட்டார்.

அன்று குழந்தை சிவகாமி.

இன்று மனைவி, தாய்!

ராமாமிர்தம்... அவள் அந்த நாற்றத்தைத் தாங்கிக்கொள்ளத்தான் வேண்டும். இல்லையானால் குடும்ப கௌரவம் நாற்சந்தியில் நாற்றம் எடுக்கத் தொடங்கிவிடும்.

தோட்டக்காரனைத் துரத்திவிட முடிந்தது; ஆனால் தொட்டுத் தாலி கட்டியவனை....?

இரவு ஒன்பது மணி தாண்டிவிட்டால்—கார் வீட்டின் போர்ட்டிகோவில் வந்து நின்றால் வழக்கமாக நடைபெறும் நிகழ்ச்சி நடக்கும்.

காரை வீட்டின் முன் நிறுத்திவிட்டு டிரைவர் இறங்கிப் போய்விடுவான்.

சிவகாமி வந்து காரின் கதவைத் திறந்து அவரைக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்று படுக்க வைப்பாள்.

''நான் செத்துப் போயிட்டா யாருங்க உங்களை இப்படி அழைச்சிட்டுப் போவாங்க?'' கண்களில் நீர் பொங்கக் கேட்பாள் அவள்.

''கவலைப்படாதே. உனக்கு முந்தி நான் போயிடுவேன்.'' அவள் கையை ஆதரவாகப் பற்றிக்கொள்வார்.

தில்லி மாப்பிள்ளையும் பெண்ணும் வந்திருந்தார்கள். சிவகாமி போனில் அவரிடம் விஷயத்தைச் சொல்லிவிட்டு, ''நீங்க நேரத்தோட வந்திடுங்க. மாப்பிள்ளை உங்களைப் பற்றித் தப்பா நினைக்காதபடி நடந்துக்கணும்'' என்றாள்.

''ம்...''

''என்ன.... ம்...? 'அளவுக்கு' மேலே போய்விடாதீங்க. அப்படி ஏதாவது நடந்திட்டா நான் செத்துப் போயிடுவேன்.''—அவளது உள்ளத் தவிப்பை அவரால் உணர முடிந்தது.

**ம**ணி ஒன்பது.

ராமாமிர்தம் வரவில்லை.

''மாப்பிள்ளையைச் சாப்பிடச் சொல்லேன்'' என்றாள் சிவகாமி மகளிடம். நெஞ்சுக்குள் ஒரே படபடப்பு.

''அப்பா வந்த பிறகு சேர்ந்து சாப்பிடலாம்மா!'' என்றாள் மகள்.

மணி ஆக ஆகச் சிவகாமிக்கு அடி வயிற்றைக் கலக்கியது. ஒன்பதரை மணிக்கு அவர் வந்தார். கார் வீட்டின் முன்னால் வந்து நின்றது. சிவகாமிக்கு அழுகை அழுகையாக வந்தது. மாப்பிள்ளை வந்திருக்கும் போது கைத்தாங்கல் கொடுத்து அழைத்து வந்தால்... இதைவிட வேறு அவமானம் எதுவும் தேவையில்லை. சிவகாமி பயந்து கொண்டே வந்தாள். ராமாமிர்தம் சிரித்துக் கொண்டு காரிலிருந்து இறங்கி வந்தார்.

''என்னங்க!''

''நார்மல்!''

சிவகாமியின் உதட்டில் சிரிப்பு அரும்பியது. மகளும் ''அப்பா!'' என்று ஓடிவந்தாள்.

''என்னம்மா... சௌக்கியமா...? நான் ஐந்து மணிக்கே புறப்பட்டேன். கல்கத்தா பார்ட்டி வந்து விட்டது...''

எல்லோரும் சேர்ந்து சாப்பிட்டார்கள்.

படுக்கப்போகும்போது மாப்பிள்ளை மனைவியிடம், ''மாமாவிடமிருந்து ஏதோ வாடை அடித்ததே!'' என்றான்.

''கல்கத்தா பார்ட்டி வந்ததாகச் சொன்னாங்களே, ஒருவேளை....''

''சரி சரி விட்டுத் தள்ளு!'' மாப்பிள்ளை அதைப் பெரிசாக எடுக்கவில்லை.

காலையில் அவர் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். சிவகாமி அவர் பக்கத்தில் சோபாவில் உட்கார்ந்தாள்.

''என்ன சிவகாமி?''

''வந்து நம்ம முரளி...''

''முரளிக்கு என்ன?''

''அவனும் உங்களைப் போல்...''

''என்ன?''

''ஆமாங்க.''

''எதையாவது உளறி வைக்காதே. உன் பிள்ளையைப் பற்றி உனக்குத் தெரியாதா?''

''எனக்கென்னவோ பயமாயிருக்கு. உங்க பிள்ளை உங்க பாதைக்கு....''

''பைத்தியம்... முரளியைப் பற்றி அப்படி நினைப்பதே பாவம்.''

''கேள்விப்பட்டதும் நானும் அப்படித் தான் நினைத்தேன். ஆனால்...''

''ம்....?....''

''நேற்று சாப்பிடும்போது இலேசாக வாடை வீசியது.''

''நீ கேட்கல்லியா?''

''கேட்டேன். 'சும்மா இருங்கம்மா, உங்க உபதேசத்தை யெல்லாம் அப்பாகிட்ட வைச்சுக்குங்க' என்கிறான்....''

ராமாமிர்தம் உள்ளங் கையால் கீழ்த் தாடையை அழுத்தமாகத் துடைத்துக் கொண்டார்.

''நீங்க கண்டிச்சு வையுங்க.''

''நானா?''

அவர் மனம் துணுக்குற்றது. ஒரு திருடன் இன்னொரு திருடனிடம் போய், 'திருடாதே' என்று உபதேசம் செய்வதா? அவர் கீறிய கோட்டைத் தாண்டாதவன் முரளி. அவனைக் கண்டிக்க அவர் ஒரு பார்வை பார்த்தாலே போதும். சப்த நாடிகளும் ஒடுங்கி அவன் அடங்கிப் போவான்.

'ச்சே!' மனம் அலுத்துக் கொண்டது.

அதற்குமேல் அவர் அது பற்றிப் பேச விரும்பவில்லை. அவர் மனம் அதில் பிடிபடாமல் நழுவிக் கொண்டிருந்தது.

அன்றைக்கு ஆபீசில் மானேஜர் அதை ஊர்ஜிதம் செய்வதைப் போலச் சொன்னார்.

''சார்! என் கண்ணாலே பார்த்தேன்... உங்க மகன் நாலைந்து பசங்களுடன் ஒயின் ஷாப்பிலிருந்து இறங்கி வந்ததை.''

''மிஸ்டர் ராகவன்! அவன் இறங்கி வந்ததைப் பார்த்தீர். குடித்ததைப் பார்த்தீரா?''

''இல்லே, சார்!''

''சிநேகிதர்களுடன் அவன் சும்மா போயிருக்கலாம் அல்லவா?''

''ஆமாம்.''

மானேஜரை எச்சரித்து அனுப்பிவைத்தார்.

என்னதான் இருந்தாலும் மகனை விட்டுக் கொடுக்க அவருக்கு மனம் வரவில்லை.

மகனைக் கண்டிக்கவும் மனம் இடந்தரவில்லை. அவனைக் கண்டித்தால், ''நீங்க மட்டும் குடிக்கலாமா?'' என்று கேட்டுவிட்டால் அதற்கு அவர் என்ன பதில் சொல்ல முடியும்?

இரவு எட்டு மணி.

வெளியே உலாவிவிட்டுக் கம்பெனிக்குத் திரும்பிக் கொண்டிருந்தார் ராமாமிர்தம். சந்து முனையில் 'சாராயக் கடை' என்ற வெட்டுப் பெயர்ப் பலகை விரல் நீட்டி அவரை அழைத்தது. வழக்கமான கடை.

கடையினுள் நுழைந்தார்.

''நூறு மில்லி — ஒரு கலர்''. ஆர்டர் கொடுத்துவிட்டுப் பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார்.

சப்ளையர் கொண்டு வந்து வைத்தான்.

கலரை உடைத்து கிளாஸில் ஊற்றியதும் திரும்பிப் பார்த்தார். வட்டமேசையைச் சுற்றி நாலைந்து பேர் உட்கார்ந்திருந்தார்கள். அதில் முரளி! அவர் மனம் 'பட்'டென்று விழுந்தது.

அவர்களில் ஒருவன் அவரைப் பார்த்தான். முரளியின் காதில் முணு முணுத்தான். முரளி அதை அலட்சியமாகத் தள்ளிவிட்டான்.

அவர் மனத்தில் பளீரென்று மின்னல் பாய்ந்தது. சில விநாடிகள் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தார்.

ராமாமிர்தம் எழுந்து விட்டார்.

''சாப்பிட ஏதாவது வேணுமா சார்?'' என்று கேட்டான் சப்ளையர்.

பத்து ரூபாய் நோட்டை அவன் கையில் கொடுத்துவிட்டு வேகமாக வெளியே நடந்தார்.

''பைத்தியம்!'' என்று சப்ளையர் முணு முணுத்தான்.

''சிவகாமி...! சிவகாமி...!''

''என்னங்க...?'' அவள் பதறியடித்துக் கொண்டு ஓடிவந்தாள்.

''உன்மேல் சத்தியமாகச் சொல்கிறேன். இனிமேல் நான் குடிக்கவே மாட்டேன்...'' என்று வெறி கொண்டவர் போல் திரும்பத் திரும்பச் சொன்னார்.

''என்னங்க... என்ன நடந்தது?'' அவள் ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

அதைச் சொல்லி முடிப்பதற்குள் அவருக்கு வியர்த்துக் கொட்டியது.

மனைவியின் கண்ணீருக்குக் கட்டுப்படாத, டாக்டரின் யோசனையைப் புறக்கணித்த ராமாமிர்தம் மனம் மாறிவிட்டார்.

மகன் தம் வழிக்கு வருவதைத் தடை செய்ய வேறு மார்க்கம் இல்லை.

சிவகாமியின் தவம் — தந்திரமாகப் பலித்து விட்டது.

'பாவம், முரளி! அவன் தனக்குக் கெட்ட பெயர் வாங்கிக் கொண்டு விட்டான்!' என்று அவள் வாய் முணுமுணுத்தது.



# 18. அன்னை மனம்




"சரி; இனி உன் தீர்மானமான முடிவைச் சொல்லலாமே!" என்று இவ்வளவு நேரம் அங்கு நிலவிய அமைதியைக் கலைத்துக் கேட்டாள் கன்னிகா மடத்துத் தலைவி ஜீத்தா.

சற்றே தயங்கிய புஷ்ப சுகந்தி, "மதர்!... கொஞ்ச நேரத்துக்கு முன்பு வரையில் என் மனம் இருந்த நிலை வேறு; இப்போது உங்களை இங்கே பார்த்துப் பேசிய பின் என்னுள் ஏதோ ஒருவிதக் குழப்பம் ஏற்பட்டு விட்டிருக்கிறது. என்னால் எதையுமே தீர்மானிக்க முடியவில்லை. ஆகவே, நான் என்ன செய்ய வேண்டும் என்பதற்கு நீங்களே ஒரு முடிவு கூறி அதை ஏற்குமாறு கட்டளை யிட்டுவிடுங்கள். எதுவாயிருந்தாலும் ஏற்றுக் கொள்கிறேன்" என்றாள் விம்மிச் செருமிக் கொண்டே.

இதைக் கேட்டு மெல்லச் சிரித்தாள் மடத்துத் தலைவி. "இந்தக் கேள்வியை, நீ இப்படி யெல்லாம் நடந்து கொள்வதற்கு முன்பே என்னைத் தனிமையில் சந்தித்துக் கேட்டிருக்க வேண்டும், சுகந்தி! அப்படி ஏதும் கேட்காமல் இவ்வளவுக்கு உன் மனம் துணிந்து செயல்பட்டபின் இனி நான் உனக்கு யோசனை சொல்வதோ அதை ஏற்கும்படி கட்டளையிடுவதோ பைத்தியக்காரத்தனம்" என்று நிதானமாக மொழிந்த அவள் சிறுபொழுது சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு மேலும் கூறினாள்:

"நீ இப்போது நினைக்கிறாய், உன்னை மடத்துக்குத் திரும்பிப் போகும்படியோ உனக்கென ஏற்பாடு செய்துள்ள துறவினி தீட்சையை ஏற்றுக்கொள்ளும்படியோ நான் புத்தி சொல்லுவேன் என்று, இல்லையா?... எனது ஸ்தானத்தில் வேறு யாரேனும் இருந்திருந்தால் ஒருவேளை இவ்வாறு சொல்லியிருக்கக் கூடும். ஆனால் நான் அப்படிச் சொல்ல மாட்டேன். ஏன் தெரியுமா? இந்தக் கன்னிகா மடத்துக்கென்று வகுக்கப்பட்டுள்ள சட்டதிட்டங்களிலும், ஒழுக்க விதிகளிலும் மட்டுமின்றி, பொதுவாகவே தனியொரு பெண்ணானவள் தன் ஆத்ம ஈடேற்றத்துக்குரிய வழி முறையைத் தானே தேடிக் கொள்வதோடு, மனித குல முழுமையின் அகப்புற நலன்களுக்குத் தன்னலமின்றிச் சேவை செய்யும் பொருட்டுத் தன்னையே பரித்தியாகம் பண்ணுவதான இந்தத் துறவு வாழ்வினை மேற்கொள்ளும் தத்துவக் கோட்பாட்டிலும் எனக்குப் பரிபூரண நம்பிக்கையும், ஆர்வமும், பற்றும் உண்டு. என்னைப் பொறுத்தவரையில் 'கிறிஸ்துவம்' என்ற ஒரு மதச் சார்பும், அதன் புறவேடங்களான இதோ நான் அணிந்திருக்கும் இந்த ஆடையணிமணிச் சின்னங்களும் முன்னர் சொன்ன இலட்சியங்களின் வழிநின்று இறுதிவரையில் செயல்பட எனக்கு உறுதியையும் ஊக்கத்தையும் தரத்தக்க ஒரு சாதனமாகவும் கவசமுமாகவே கருதுகிறேன். ஆகவே, அப் புனிதத் தத்துவத்தைப் புரிந்து கொள்ளாதவர்களையும், அதில் உண்மையான ஈடுபாடோ உறுதியான நம்பிக்கையோ அற்றவர்களையும் வலுக்கட்டாயமாக — இந்த மடத்துக்கு ஆள் பிடிக்கும் ஒரே நோக்கில் — ஆசை காட்டி இழுக்கவோ, அவர்களுக்கு யோசனை சொல்லவோ, வற்புறுத்தித் தூண்டவோ நான் ஒருபோதும் துணியமாட்டேன். இங்கே ஆத்மாவின் கண்ணைக் கொண்டு உலக வாழ்க்கையைக் காண்கிறவர்களுக்கு மட்டும்தான் இடம்; இந்திரியங்களின் உணர்ச்சிகளால் அதனை ஸ்பரிசித்து அறிய விரும்புகிறவர்களுக்கு இடமே இல்லை. இவ்வகையில் பார்க்கும்போது இந்த மடத்தில் இனி ஒரு நிமிட நேரம் தங்குவதற்குக்கூட நீ தகுதியற்றவளாகிவிட்டாய். இத்தகையவளை இதற்குமேலும் நான் விடாமல் இழுத்துப் பிடித்து நிறுத்துவேனாகில் என்னுடைய கடமையிலிருந்து தவறியவளாக மட்டுமல்ல, எனக்குரிய அதிகார வரம்பையும் மீறியவளாவேன். எனவே, நீ எந்த முடி

வோடு இவ்வளவு தூரம் கிளம்பி வந்தாயோ, அந்த முடிவுடனேயே இனியும் தொடர்ந்து செல்வதைத் தவிர உனக்கு வேறு வழியில்லே.''

சுகந்தியின் விம்மலும் தேம்பலும் மிருதியாயின. அவள் ஏதும் பேசத் திராணி இழந்தவள் போல் மௌனமாய் நின்றாள்.

மடத்துத் தலைவி மேலும் சற்று நெருங்கி வந்து அவளின் முதுகைப் பாசப் பரிவுடன் தடவிக் கொடுத்தாள். பிறகு, ''இங்கே பார், சுகந்தி! இப்படியெல்லாம் நான் சொல்வதால், நீ ஏதோ தெரியாத்தனமாய் — அல்லது தெரிந்தே கூட — தகாத வாழ்க்கையொன்றை மேற்கொள்வதற்காக இங்கிருந்து தறிகெட்ட மனத்துடன் ஓடுகிறாய் என்று எண்ணி உன்னை வெறுப்பதாகவோ விரோதிப்பதாகவோ பழிப்பதாகவோ கனவிலும் கருதிவிடாதே! ஒருவர் தம் வாழ்க்கையில் முழுமை காணவும், அதனை முழுமையாக்கவும் பல நன்மார்க்கங்கள் உள்ளன. அவற்றில் அவரவர்களுக்கு உரியதை அவரவரே தேர்ந்தெடுத்துக் கொள்வதில் தவறு எதுவுமில்லே. நாங்கள் மேற்கொண்டிருக்கும் இந்தத் துறவு மார்க்கம் ஒன்றுதான் ஆத்மக் கடைத்தேறலுக்கான ஒரே மார்க்கம் என்று இதனை எல்லோருமே ஏற்று விட்டிருந்தால் இவ்வுலகில் இதுகாறும் மனித குலமே பூண்டற்று அழிந்து போயிருக்கும் இல்லேயா? எந்த ஒரு மார்க்கமானாலும் அதிலே நாம் அடியெடுத்து வைத்து நடந்து செல்லும் நெறி முறைகளால்தான் நமது வெற்றியோ தோல்வியோ அமைகின்றனவே தவிர அம்மார்க்கமே நமக்கு அவற்றை ஈட்டிக் கொடுத்துவிடுவதில்லே. எனக்கே தெரியும், இது போன்ற மடங்களில் தூய கன்னிகாஸ்திரீகள் என்னும் போர்வையில் மறைந்து கொண்டு எத்தனையெத்தனையோ விதமான சாத்தான்கள்—லூசிஃபேர்கள் — உலவுகின்றன. இதனால்தான், வெளியில் வீட்டுக்கு ஒரு பேய் என்றால் கன்னிகா மடங்களில் ஓட்டுக்கு ஒரு பேய் இருக்கும் என்ற பழமொழியே ஏற்பட்டு விட்டிருக்கிறது...'' என்று சொல்லி மெல்லச் சிரித்தாள். ''ஆனாலும், சுகந்தி! கடந்த பதினேழு வருட காலமாய் இந்த மடத்திலே உண்டு உறங்கி ஓடியாடிப் பாடி மகிழ்ந்து வளர்ந்து வாழ்ந்து வந்தவளான நீ, இம்மடத்துத் தலைவி என்ற ஒரு மரியாதைக்காக இல்லா விட்டாலும், உன்னை அவ்விதமாய் வளரவும் வளர்க்கவும் வைத்தவள் என்ற ஒரு நன்றி விசுவாசத்தைக் காட்டும் வகையிலாவது, இங்கிருந்து போகும் முன் என்னைப் பார்த்து இரண்டு வார்த்தை சொல்லியிருக்கலாம். அப்படிச் சொல்லவில்லேயே என்று நினைக்கும்போதுதான் என் மனம் என்னையும் அறியாமல் கொஞ்சம் ஆயாசப்படுகிறது'' என்றாள்.



''அம்மா!... என்னை மன்னிச்சுடுங்க அம்மா!'' என்று விம்மிப் பொருமினாள் புஷ்ப சுகந்தி.

சட்டென்று எதையோ 'நினைத்துக் கொண்டவள் போல், ''ஓ... நான் இப்படிச் சொல்வதுகூடச் சரியில்லே என்றே நினைக்கிறேன், சுகந்தி! ஏனென்றால் நானும் இம்மாதிரியான சந்தர்ப்பத்தில் உன்னைப் போலவேதான் நடந்து கொண்டுவிட்டேன்'' என்று கூறிய மடத்துத் தலைவி சிறிது தயங்கினாள். அவ்விஷயத்தைச் சொல்லலாமா, வேண்டாமா

எனச் சிந்திப்பவள் மாதிரி சற்று நேரம் பேசாதிருந்தாள். பிறகு ஓர் அலட்சியச் சிரிப்புடன் தொடர்ந்தாள்: ''ஆமாம்; செல்வமும் செல்வாக்கும் கொண்ட பெரியதொரு குடும்பத்தில் ஒரே பெண்ணாகப் பிறந்தவள் நான். பொன்னைப் போலவும் பூவைப் போலவும் போற்றி வளர்க்கப்பட்டவளும்கூட. பதினாறு வயது ஆனபோது என் பெற்றோர் என்னை ஒருவனுக்கு மணம் செய்து வைக்க முடிவு செய்தார்கள். எனக்கு ஏனோ அப்போது திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற விருப்பமே ஏற்படவில்லை. இதை என் பெற்றோரிடம் சொன்னேன்; கேட்கவில்லை. எனது எண்ணத்தையோ விருப்பத்தையோ அவர்கள் பொருட்படுத்தவில்லை. ஒருவிதச் சர்வாதிகார மனப்பான்மையுடன் தங்கள் முடிவையே அவர்கள் செயல்படுத்த முனைந்தார்கள். இதனால் வெறுப்பும் விரக்தியும் அடைந்த நான் ஒரு நாள் இரவு என் நகை நட்டுக்களையெல்லாம் கழற்றி வைத்து விட்டு வண்டிச் சத்தத்துக்கு மட்டும் கொஞ்சம் பணம் எடுத்துக் கொண்டு எவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டுக் கிளம்பி இந்த மடத்தில் வந்து அடைக்கலம் புகுந்தேன். பிறகு என் பெற்றோருக்குக் கடிதம் மூலமாக விவரம் தெரிவிக்கப்பட்டது. அவர்களும் பறந்தடித்துக் கொண்டு ஓடி வந்தார்கள். என்னை இங்கிருந்து அழைத்துப் போக எவ்வளவோ முயன்றார்கள். நான் ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டதால், கடைசியில் என் விருப்பப்படியே இந்த மடத்துக்கு என்னைச் சொந்தமாக்கி விட்டுக் கண்ணீரும் கம்பலையுமாக அவர்கள் திரும்பிச் சென்றார்கள்....''

தன்னுள் திடுமெனக் கிளர்ந்து வீசிய துயரப் புயலால் மூச்சு முட்டச் சற்று நேரம் மௌனமாயிருந்த அவள் உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டாள். ''சரி, அது போகட்டும்! நீ இந்த இரவுவேளையில் இங்கிருந்து ஓடிவிடக் கிளம்பியிருக்கிறாயே, தன்னந்தனியாய்ச் செல்ல உனக்குத் தைரியம் இருக்கிறதா? எங்கே போவதாகத் திட்டம்? உன் தாயாரிடமா? அல்லது வேதமூர்த்தி என்ற அந்தக் கனவானிடமா?'' என்று பரிவுடன் கேட்டாள்.

புஷ்பகாந்திக்கு இப்போதுதான் தன் மதியீனத்தின் பயங்கரம் புலனாயிற்று. ''அதெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது, மதர்! என் அம்மாவையோ, அந்தப் பெரியவரையோ நான் ஒரு முறைகூடப் பார்த்ததும் இல்லை'' என்று நடுங்கிக் குழறினாள் அவள்.



"இப்படித்தான் சொல்லுவாய் என்று எதிர்பார்த்தேன்; அது சரியாகி விட்டது. உணர்ச்சிகள் எழுச்சியுறும் போது விவேகம் உறங்கிவிடுவதில் வியப்பு ஒன்றுமில்லை. சரி; இனி நீ என்ன செய்வதாக உத்தேசம்? அதையாவது சொல் !"

சில விநாடி யோசனைக்குப் பின் தயங்கிய குரலில்; "மதர் ! பொழுது விடியும் வரை நான் இங்கே இருக்க அநுமதித்து, விடிந்தபின் போய்விட உதவி செய்யுங்கள் மதர்!" என்று குழைந்தாள் சுகந்தி.

"ஓ.... அது நடக்காத காரியம், மகளே!" என்றாள் மடத்துத் தலைவி உறுதியாக. "ஏன் என்று கேட்கிறாயா? இந்த மடத்துக்குரிய ஒழுக்க விதிகளின் படி பார்த்தால் நீ இப்போது ஒரு பாபாத்மா. 'மார்ட்டல் சின்'னுக்கு ஒப்பான குற்றம் புரிந்தவள். அதாவது, 'நன்' ஆவதற்கு முன்னிலையான 'ப்ரீ — ஆஸ்பைரன்ட்'டாக மட்டுமே இதுவரையில் இருந்துவந்த நீ, இன்னும் சில தினங்களில் 'ஆஸ்பைரன்ட்'டாவதற்கு ஒப்புக் கொண்டுவிட்டு இப்போது திடீரென்று அதை ஏற்கப் பிடிக்காமல் இம் மடத்தை விட்டே ஓடிவிடத் துணிந்துவிட்டாய். ஆரம்ப நிலையிலேயே இம்மாதிரி உன் மனத்தை மாற்றிக் கொண்டதற்காக உண்மையில் நான் பெரிதும் சந்தோஷப்படுகிறேன். இதுவே ஆஸ்பைரன்ட், நொவிஷியேட், நன் என்னும் நிலைகளுக்கு உயர்ந்துபோனபின் நடந்திருந்தால்? அது இந்த மடத்துக்கு எவ்வளவு கெட்ட பெயரைத் தேடித் தந்து விடும்!.... எனவேதான் இப்போதே இங்கிருந்து வெளியேறிவிட உனக்கு அநுமதி வழங்குவதோடு உன்னை வழி கூட்டி அனுப்பவும் நான் இத்தனை தூரம் வந்தேன். இதுவும் தவிர, இவ்விஷயம் இங்குள்ள மற்றப் பெண்களிடையே பரவினால் அதுவே அவர்களுக்கெல்லாம் ஒரு தவறான முன்மாதிரியாகிவிடும் என்பதோடு, மேலும் இம்மாதிரி பல சம்பவங்கள் தொடர்ந்து நடக்கவும் ஏதுவாகிவிடலாம். அத்தகைய விரும்பத்தகாத விளைவுகளுக்கெல்லாம் இடம் வைக்காமல் நீ இப்போதே இந்த வழியாகவே வெளியேறி விடுவதுதான் நல்லது."

அவமானத்தால் உடல் குன்றிப் போன சுகந்தி, "ஆகட்டும் மதர் !" என்று கம்மிக் கரைந்த குரலில் முணுமுணுத்தாள்.

"கவலைப்படாதே, மகளே ! உன்னை மட்டுமல்ல, இந்த மடத்திலுள்ள வேறு எந்தப் பெண்ணையும் — என்னதான் தவறு செய்தாலும் — என் மனமறியத் தவிக்கும்படி விட்டுவிட மாட்டேன்" என்று பரிவோடும் பாசத்தோடும் சொன்னாள் மடத்துத் தலைவி. "ஆனாலும் ஒரு விஷயம் ! உன் தாயார் இருக்குமிடம் எனக்குத் தெரியாது. அவள் எங்கே, எப்படி, என்னவிதமாய் வாழ்கிறாள் என்னும் விவரங்களும் தெரியாது. உன்னை இங்கிருந்து அழைத்துச் செல்ல வந்த வேதமூர்த்தி என்பவருக்குத்தான் கடிதம் எழுதியிருந்தாளே தவிர எனக்கு ஒன்றும் எழுதவில்லை. நானும் அவளைப் பற்றி அவரிடம் விவரம் எதுவும் கேட்கவில்லை. அப்படிக் கேட்பது அநுசிதமானது என்பதோடு எனக்குத் தேவையும் இல்லாதது என்பதால் நான் பேசாதிருந்துவிட்டேன்" என்றாள் மெல்லச் சிரித்துக் கொண்டே. சில விநாடி யோசனைக்குப் பின், "சரி; என்னோடு வா!" என்றவாறு டார்ச் விளக்கின் ஒளியை முன்னே பாய்ச்சிக் கொண்டு தோட்டக்காரனின் அந்தச் சிறு வீட்டை நோக்கி நிதானமாக நடந்தாள்.

திக்பிரமை பிடித்த நிலையில் நின்றிருந்த புஷ்பசுகந்தி கால்கள் பின்னித் தள்ளாட அவளைப் பின்தொடர்ந்து சென்றாள்.

"ராயப்பா ! ராயப்பா !"

சற்றைக்கெல்லாம் அவ்வீட்டினுள் அரிக்கன் விளக்கு ஏற்றப்படுவது தெரிந்தது. தூக்கக் கலக்கத்துடன் அரக்கப் பரக்கக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த தோட்டக்காரக் கிழவன் அங்கு நின்றிருந்த மடத்துத் தலைவியைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தவனாய், "மதர்!...." என்று குழறிப் பின்னால் நகர்ந்தான்.

"நான்தான் ராயப்பா!" என்று அமைதியாகப் பதிலிறுத்த ஜீத்தா மேரி, "இங்கே வா ! இதோ, இந்தப் பெண் யாரென்று உனக்குத் தெரிகிறதல்லவா; இவளை இப்போதே அழைத்துப் போய் இவ்விலாசத்திலுள்ள வீட்டாரிடம் ஒப்படைத்துவிட்டு வர வேண்டியது உன் பொறுப்பு!" என்று கட்டளையிடும் குரலில் கூறிக் கொண்டே ஒரு சிறு கார்டைக் கொடுத்தாள். அது வேதமூர்த்தியின் வீட்டு விலாசம் அச்சிட்ட விசிட்டிங் கார்டு.

ஒன்றும் புரியாமல் விழித்தபடி சுகந்தியையும் மடத்துத் தலைவியையும் மாறி மாறிப் பார்த்தான் தோட்டக்காரக் கிழவன். "ஆகட்டும், மதர்!" என்றவாறு கையில் அரிக்கன் விளக்கை எடுத்துக் கொண்டு பூட்டிக் கிடந்த பின்புற வாயில் கதவைத் திறப்பதற்குச் சாவியுடன் விரைந்து சென்றான்.

தலை முக்காட்டைச் சரியாக இழுத்துப் போர்த்திக் கொண்ட புஷ்ப சுகந்தி மடத்துத் தலைவியின் முகத்தை ஏறிட்டு நோக்கினாள்.

ஜீத்தாவும் அந்தப் பெண்ணையே சில விநாடி நேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுத் தனது நீண்ட அங்கியின் ஜேபியிலிருந்து ஏதோ ஒன்றை எடுத்து அவளிடம் நீட்டினாள்.

'' இது என்ன மதர் ?'' என்று வினவியவாறு வாங்கி டார்ச் வெளிச்சத்தில் பார்த்தாள் சுகந்தி.

அது ஒரு காட்பரி சாக்லட் ஸ்லாப் !

'' நீ சின்னக் குழந்தையாயிருந்த போது என்னை எங்கே கண்டாலும், உடனே தூக்கிக் கொண்டு தோட்டத்தில் உலாவும்படி ஊமை ஜாடை காட்டுவாய். எனக்கு ஏதேனும் அவசர வேலை இருந்து முடியாதென்றால் கேட்கமாட்டாய் ; அழுது அடம் பிடிப்பாய். அப்போதெல்லாம் இம்மாதிரி ஒரு சாக்லெட் துண்டைக் கொடுத்துச் சமாதானப்படுத்துவேன். நீயும் உன் பிடிவாதத்தை விட்டுவிட்டுச் சாக்லெட்டை வாயில் போட்டுக் குதப்பிக் கொண்டே என்னைப் பார்த்துச் சிரிப்பாய். அந்த ஞாபகம் இப்போது வந்து விட்டது. அதனால்தான்.... ''

'' அம்மா !'' என்று உள்ளடங்கிய குரலில் கதறி அழுதுவிட்ட சுகந்தி அப்படியே தரையில் முழந்தாளிட்டுக் கரங்களைக் கூப்பினாள்.

அவளைக் கனிவுடன் தூக்கி எடுத்துத் தன்னோடு அணைத்துக் கொண்ட மடத்துத் தலைவி தன் வலக்கையை அவளின் உச்சந்தலையில் வைத்தவாறு சற்று நேரம் மௌனமாயிருந்துவிட்டுப் பிறகு, ''உம், மகளே! நேரமாகிறது!'' என்றாள் கரகரத்த குரலில்.

தட்டுத் தடுமாறியபடியே சுகந்தி, ''போய்விட்டு வரேம்மா!'' என்று விம்



மலும் பொருமலுமாகக் கரைந்தவாறு தயங்கித் தயங்கி மேலே நடந்தாள்.

பூட்டிக் கிடந்த வாயில் கதவைத் திறந்தான் ராயப்பன். முதல் முறையாகத் தன்னிச்சையுடன் அந்தக் கன்னிகா மடத்துக்கு வெளியே போய் நின்ற அவள் மெல்லப் பின்னால் திரும்பிப் பார்த்தாள். மடத்துத் தலைவியைக் காணோம். அங்கே வானுக்கும் பூமிக்குமாய் ஒரு பெரும் கறுப்புத் திரை தொங்குவது போன்ற காட்சியே அவளுக்குத் தென்பட்டது.

தோட்டக்கார ராயப்பன் கையில் அரிக்கன் விளக்குடன் சாலையில் இறங்கி நடக்க, அவனுக்குப் பின்னால் சுகந்தியும் சென்றாள்.

''ஐயா!.... தயவுபண்ணிக் கொஞ்சம் நில்லுங்க ஐயா !''

இடுக்குற்றுப் போன கிழவன் தன் கையிலிருந்த விளக்கைத் தூக்கிப் பிடித்துப் பார்த்தான்.

அங்கே, அந்த மடத்து மதில்சுவரை ஒட்டினாற்போல் வளர்ந்திருந்த ஒரு பெரிய ஒதிய மரத்தின் பின்னால் ஒளிந்து நின்று கொண்டிருந்த பெண் ஒருத்தி பயப்பிராந்தியுடன் நடுங்கியபடியே வெளியே வந்தாள். கண்ணம்மா தான் அவள்.

'' அட, நீ இன்னமும் இங்கேயா இருக்கிறே ?'' என்று வியப்பும் சிரிப்புமாகக் கேட்டான் தோட்டக்காரக் கிழவன் ராயப்பா.

''ஆமாங்கய்யா !'' என்று பயந்து குழறியவாறு அவ்விருவரையும் திருதிருவென்று விழித்துப் பார்த்தாள் கண்ணம்மா.

மூன்று தினங்களுக்குமுன் மாயூரத்துக் காவேரிக் கரையில் அவள் விளங்கிய கோலத்துக்கும் இப்போது இருக்கும் நிலைக்கும் எவ்வளவு வித்தியாசம் ! பாதி உடம்பாய் இளைத்து வெளுத்து, அணிந்திருந்த ஆடையும் அழுக்கேறி, தலைவிரிகோலமாய்ப் பார்க்க மிகவும் பரிதாபமாகக் காணப்பட்டாள்.

''ராயப்பா ! யார் இந்தப் பெண்?'' என்று இரகசியக் குரலில் வினவினாள் சுகந்தி.

எதையோ நினைத்துப் பெருமூச்சு விட்ட தோட்டக்காரக் கிழவன், ''யாருன்னு நான் என்னத்தைச் சொல்கிறதம்மா?.....'' என்றான் விரக்தியுடன். ''இன்னிக்குக் காலம்பற எதுக்கோ ' இவ்வழியாய்ப் போனேன். அப்போ இந்தப் பெண் என்கிட்டே வந்து தன்னை மடத்திலே சேர்த்துக்குவாங்களான்னு கேட்டது. உள்ளே போய் விவரிக்கச் சொல்லி மெயின் கேட்டைக் காட்டினேன். அப்புறம் மத்தியானமா திரும்பி வந்தப்பப் பார்த்தால் கேட்டுக்கு வெளியே இது உட்கார்ந்துக்கிட்டு இருக்குது. என்ன ஆச்சுன்னு கேட்டேன். சாத்திய கதவு சாத்தியே கிடக்குதுன்னும், யாரும் வெளியில் வரலேன்னும் சொன்னது. கதவிலே தொங்கற மணிக் கயித்தை இழுத்தால் யாராச்சும் வந்து திறப்பாங்கன்னு சொல்லிட்டு என் காரியங்களைக் கவனிக்கப் போயிட்டேன். சாயந்திரம் பின்பக்கத்துக் கேட்டண்டை இது வந்து அழுதுகிட்டு நின்னது. நான் சொன்னபடியே ரெண்டு மூணு தடவை கயித்தை இழுத்து மணியடிச்சுதாம். யாருமே கதவைத் திறக்கலையாம். அப்பத்தான் எனக்கும் விஷயம் புரிஞ்சுது. இன்னிக்கு நம்ம மடத்துக் கன்னியா ஸ்திரீங்களுக்கெல்லாம் கடைசி நாள் ஒடுக்க தியானம் இல்லையா ? அதிலே உட்கார்ந்துட்டா எழுந்து வரமாட்டாங்க; அப்படி வந்தாலும் யாரையும் பார்த்துப் பேசமாட்டாங்க. பாவம், இந்தப் பெண் சோறு தண்ணி இல்லாமல் காதடைச்சுப் போய் நின்ன கோலம் ரொம்பப் பரிதாபமாய் இருந்தது. ரெண்டு ரொட்டித் துண்டும் கொஞ்சம் காப்பியும் கொண்டு வந்து கொடுத்துப் போயிட்டேன். அப்புறம் வெளியே வர முடியலே. பொழுதும் சாய்ஞ்சுட்டது. இந்தப் பெண்ணின் ஞாபகமும் வரலே. மறந்து போச்சு. இப்ப வந்து பார்த்தா.....''

மறுபடியும் பெருமூச்சு விட்டுக் கொண்ட தோட்டக்காரன், ''ஏம்மா, இன்னிக்கு ராத்திரி முழுக்க நீ இங்கேயா இருந்தே?'' என்று ஆச்சரியம் கலந்த அநுதாபத்துடன் கேட்டான்.

''ஆமாம், தாத்தா ! இந்த மரத்துக்குப் பின்னாடி மதில் சுவர் ஓரமா ஒளிஞ்சு உட்கார்ந்துக்கிட்டு இருந்தேன்'' என்று சொல்லும்போதே கண்ணம்மாவுக்குப் பயத்தால் உடல் நடுங்கிச் சொற்கள் குழறிப் போயின. அவள் மெல்ல விசும்ப ஆரம்பித்தாள்.

''என்னடா இது, சங்கடம்!'' என்று தனக்குள் முணுமுணுத்த தோட்டக்காரன், ''சரி, சரி ; அழாதே அம்மா! யாராவது ரோட்டில் போறவங்க வரவங்க பார்த்தால் — அதுவும் இந்த நேரத்திலே — என்னமாவது நினைச்சுக்குவாங்க !'' என்றான். (தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# ஏசிசி ஹாட்-ஃபேஸ் வெப்பத்தடை ஃபயர்பிரிக்குகளை அறிமுகப்படுத்துகிறது.



ஹாட்-ஃபேஸ் வெப்பத்தடை ஃபயர்பிரிக்குகள் பொருத்தப்பட்ட அனீலிங் உலைகள்.

உருக்கப்பட்ட உலோகத் தாதுக்கள், உலோகங்கள், கண்ணாடி, எனாமல் முதலியவற்றுடன் தொடர்பற்ற திறந்த உலைபகுதிகளுக்கு உபயோகிக்கலாம். வெப்ப வேலைகளுக்கு உபயோகப்படுத்தப்படும் உலைகள், வெப்பம் மற்றும் குளிர்சாதன உலைகள், மலியபிள் அனீலிங் அடுப்புகள், ஸ்ட்ரெஸ் ரிலீவிங் அடுப்புகள் மற்றும் மட்பாண்ட சூளைகள் இவைகளுக்கு ஏற்றவை.

**ஏசிசியின் வெப்பத்தடை ஃபயர்பிரிக்குகள்**

■ எரிபொருள் செலவு மிச்சம் ■ உலையினுள் சீரான வெப்பம் ■ விரைவில் சூடு பெறுவதால் அதிக உற்பத்தி ■ உலையினுள் வைக்கப்படும் பொருள்களுக்கு சீரான சூட்டு வினியோகம்.

**ஏசிசி**
தரமான
தயாரிப்புகளுக்கு
ஒப்பற்ற
உத்தரவாதம்

தி அஸோஸியேடட் ஸிமெண்ட்
கம்பெனீஸ் லிமிடெட்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

ஸ்ரீலங்காவில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)




பருகும் காப்பிக்கு
இனிமை:
பார்லே மாரி அருமை !



பார்லே
மாரி
பிஸ்கட்

everest/505b/PP TM